

1929ஆ பிப்ரவரி 17, 18உகளில் செங்கற்பட்டில் நடைபெறப்போகும் தமிழ் மாகாண சுயமரியாதை மஹா நாட்டிற்காக நிர்மாணிக்கப்பட்டிருக்கும் தியாகராயர் நகரம்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | விபவஹு மாசிமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 14 | 1929ஹு பிப்ரவரிமீ 12உ | 8 |


## கடவுள் வணக்கம்.

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலும்
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற இருகும்ப
மூலையின்மணி மாலை நால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாச மோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றால்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
யிவ்வுலக மறியாததோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக் கையாநின் னருள்வழங்கின்
இழுக்காகு மென்றெண்ணி யோவிரங் காத வியல்புகண்டாய்
முழுக்காத லாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனுங்
குழுக்காண நின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே. (2)

சொல்லுஞ்!சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்
அல்லல் ஒழிவதென்றைக் கையா பராபரமே. (3)



# அரும்பொருள் விளக்கம்.

(இ-ள்) இதனால் அழிவில் இன்பமாகிய மோட்சத்திற்குப் பகட்டுத் தன்மையுள்ள மாதரின்பம் தடை என்பதை விளக்குகிறார்.

மக்களுடைய உண்மை நோக்கம் வீடுபேறு. ஆனால் பகட்டுத்தன்மை யுள்ள மாதர் போகம் வீட்டின்ப முயற்சிக்குப் பெருந்தடையாகும். பெண் களின் ஒவ்வொரு உறுப்பும் காமக்கிளர்ச்சியை உண்டாக்கி மயக்குகிறது என்பார் "முத்தனைய மூரலும்...................................சிற்றின் பமோ" என்றார். மண்ணுலகில் மாத்திரமல்ல பொன்னுலகமாகிய தேவ லோகத்திலும் சிற்றின்பம் தேவர்களை வாட்டிற்று என்பார் "புத்தமிர்த போகம்........................வந்த தென்றால்" என்றார். முத்தியின்பத் திற்குரிய முயற்சி இவ்வுலகத்தில் போராட்டமாய் முடிகிறது. அநேக பிரதி பந்தங்களைக் கடக்கவேண்டும். இதற்கு "பிறந்த பொழுதே துறந்து பிறைக்குழவிபோல் நடித்த" சுகரது வரலாறே மக்களால் பின்பற்றத் தக்கது என்பார் "போராட்ட மல்லவோ..................இவ்வுலக மறியாததோ" என்றார்.

மூரல்=பற்கள். விரக சன்னதம்=காமவெறி. நால=தொங்க. மாயா விலாசம்=பொய்மையான மகளிர்கேளிக்கை. வாரிதி=சமுத்திரம். புத்த மிர்தம்=புதிய அமிர்தம். விகாதம்=தடை, பிரதிபந்தம். இகபரம்=இம்மை மறுமை.

2. இதனால் தமக்குள்ள திருவருள் வேட்கையை வெளியிடுகின்றார்.

அழுக்கு ஆர்ந்த=குற்றம் நிறைந்த. இங்கே குற்றம் என்றது காம வெகுளி மயக்கங்களை. இழுக்கு=பக்குவமின்மையாகிய தோஷம். முழுக் காதல்=பூரண அன்பு. குழு=கூட்டம்.

இறைவன், தன்பால் பூரண அன்பைக் கொண்டு, அந்த அன்பைக் கண்களின் மூலமாக ஆனந்த நீரைப் பெருக்கிக் காட்டவல்ல முத்தர் களுக்கே, திருநடனம் புரிந்தருள்கின்றனனெனவே ஆசிரியர் அவ்வாறாகாத தமக்கு அப்பெருமான் எங்ஙனம் இரங்குவன் என நினைத்து வருந்துகின் றார்.

3. சமயாதீதப் பொருளாய் நாமரூபமற்ற இறைவனே! ஜீவகோடி களின் கன்மத்திற்கேற்றவாறு,வெவ்வேறாகச் சொல்லப்படும் சமய நெறிக ளாகிற சுழற்சித் துன்பத்திலிருந்து நான் என்று விடுபடுவது? என்று இப் பாட்டில் கூறுகிறார்.

நெறி=மார்க்கம்; சுற்று=சுழற்சி;

அல்லல்=துன்பம்.




## கிராம முன்னேற்றம்.

'கிராமங்கள் கடவுளின் சிருஷ்டி. நகரங்கள் மனிதன் ஆக்கியவை' என்பது ஓர் ஆங்கிலப் பழமொழி. 'பட்டினந் தன்னிலும் பாக்கம் நன்று' என்றனர் நமது தேசீய கவிராயர். உண்மையில் கிராமங்களில் காணப்படும் அமைதி, போற்றத்தக்க எளிமை, திருப்தி முதலிய நறுங்குணங்கள் பட்டினங்களில் காணல் அருமை. பட்டினத்தில் கிடைக்கும் அறிவுத்தேட்டம், பரந்த நோக்கம் முதலியவை நாட்டுப்புறங்களில் கிடையா. இவற்றுள் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது? என்று இப்போது நாம் வாதிக்க விரும்பவில்லை. இங்கு நாம் குறிக்க நினைப்பதெல்லாம் நமது நாட்டு முன்னேற்றம் கிராமங்களின் முன்னேற்றத்தின் அளவைப் பொறுத்து நிற்கிறது என்பதேயாகும்.

இந்தியநாடு கிராமங்களின் களஞ்சியம். இந்நாட்டின் உயிர்நாடி — ஜீவ சத்து—ஆத்மப் பிரகாசம் — கிராமங்களிலேயே விளங்குகின்றது. நகரவாசிகள் ஒப்பினும், ஒப்பாவிடினும் இஃதோர் மறுக்கமுடியாத உண்மை. நமது மக்களின் தொகையில் நூற்றுக்கு ஏறக்குறைய தொண்ணூறு பேர் கிராமவாசிகளே யாவர். எங்கேனும் ஓர் நகரம் இருந்தால் அதைச்சூழ்ந்து ஆயிரங் கிராமங்கள் மிளிரும். ஆகவே நமது முன்னேற்றம், சீர் திருத்தம் இவைகளெல்லாம் கிராமங்களைக் கவனியாத வரையில் குதிரைக் கொம்பாகவே முடியும். எத்தனையோ இயக்கங்கள் நமது நாட்டில் தோன்றித் தோன்றி அழிந்தன; இன்னும் பல இருக்கின்றன; நாளைக்கும் பல தோன்றும். மேடைப் பிரசங்கங்கள் பலபேசித் தீர்க்கப்பட்டன. என்னபயன் இதுவரை விளைந்திருக்கிறது? "இதெல்லாம் வெறும் மிரட்டல்; இந்தியர்களால் என்னசெய்ய முடியும்?" என்று பிறர் சிரிக்கத்தக்க நிலைமை ஏற்பட்டதைத் தவிர வேறொன்றுமில்லை. காரணமென்ன? கிராமங்களைக் கருதாம லிருந்ததுதான் என்று ஒரே வார்த்தையில் கூறிவிடலாம்.

நமது கிராமங்களை நினைக்கின்ற பொழுது நமது கண்ணில் இரண்டு காட்சிகள் எழுகின்றன. ஒன்றில் இன்பம் ததும்புகின்றது. பெருமை துள்ளுகின்றது; அறம் நடிக்கின்றது. மற்றொன்றிலோ, கண்ணீர் கலுழ்கிறது; துக்கம் நெஞ்சை அடைக்கின்றது. முன்னது முற்காலத்திய கிராமக்காட்சி. பின்னது தற்காலத்திய கிராமவீழ்ச்சி. இவை யிரண்டிற்குமுள்ள தாரதம்மியத்தைக் கண்ட பின்னும் நாட்டுப் புறத்தைப்பற்றிக் கவலை கொள்ளாதார் மக்களல்லர்; மாக்களே யாவர்.

முற்காலத்தே ஒவ்வொரு கிராமமும் பரிசுத்தத்தின் இலக்கியமாய் விளங்கிற்று. ஒவ்வொரு வீட்டிலும் திருப்தி வீறுகொண்டு திகழ்ந்தது. கல்வியும் அறிவும் ஒழுக்கமும் நமது நாட்டுப்புறங்களில் ஒன்றுகூடி விளையாடின. இப்போதும் செல்லரித்தது போக மிஞ்சியுள்ள சாத்திர ஏடுகள் வேண்டுமெனில் நமது கிராம மக்களிடமே தேடவேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. நிலவளமும், நீர்வளமும் மிகுந்து நல்ல நிலைமையில் இருந்ததால் அக்காலத்து மக்கள் பஞ்சத்தால் பஞ்சாகப் பறக்கவில்லை. மற்றும் நாகரிகமென்ற பெயரால் அநாவசியமான தேவைகளை உண்டாக்கிக் கொண்டு அவைகளை அடைய வழியின்றித் திண்டாடும் தற்கால மக்களைப்போன்று அவர்கள் துன்புறவில்லை. ஒவ்வொருவர் முகத்திலும் இன்பமும், அன்பும் இன்சொல்லும் தாண்டவமாடின; அழகு ஒளிர்ந்தது. பலநிறக் கைத்தொழில்கள் மாட்சிபெற்றிருந்த பெருமை நமது கிராமங்களுக் குரியது. உதாரணமாக நமது கிராமத்திற் செய்த அழகிய 'பாலாவியன்ன' ஆடைகள் இன்றும் யந்திர மூலம் செய்யமுடியாத மென்மையுடையவை. இவை மட்டுமன்றி ஒவ்வொரு சிற்றாரிலும் ஐவர்கூடிய பஞ்சாயத்துச் சபை ஒவ்வொன்றுண்டு. அவற்றில் அவ்வூரின் முன்னேற்றத்தைக் குறித்த தீர்மானங்கள் செய்யப்படும். அழகிய சிறு சிறு வீடுகளும், ஒவ்வொரு வீட்டைச் சுற்றியுமுள்ள தோட்டங்களும், இருபுறமும் வேலியிட்ட தூயபாதைகளும், ஊரைச் சூழ்ந்துள்ள வயல்வெளிகளும், தோப்புத் துரவுகளும், பொதுவாகப் பச்சைப் பசேலென்ற கண்ணைக்கவரும் காட்சிகளும்—ஆ! அத்தகைய கிராமங்களை நினைக்கும்பொழுதே மகிழ்ச்சி பொங்குகிறது.

தற்கால கிராமங்களை நினைக்கும் பொழுதே நெஞ்சு பகீரென்கின்றது. உடைந்த குட்டிச்சுவர்கள்—உழுத்த கூரைகள்-ஓலை வேய்ந்த ஓட்டை வீடுகள்—நடுவே ஒன்றிரண்டு ஓட்டுவில்லைக் காரைமாளிகை

கள்—வீட்டின் பக்கத்திலேயே குப்பை கூளங்கள்—அசுத்தம் நிறைந்த குறுக்கு நெடுக்காய் ஓடும் சிறு சிறு சந்துகள்—சேற்று நாற்றம்—சல தாரைக் கவிச்சு முதலியவை பெரும்பாலான கிராமங்களை விகாரப் படுத்துகின்றன. கக்கூஸ் கிடையாது. தெருக்களே அப்புண்ணிய காரியத்திற்கு அதன் ஓரங்களைத் தத்தம் செய்கின்றன. வீதி முடக்கில் வயிறொட்டிய நாய்களின் குரைப்பு — உடலொடுங்கி, கண் குழிந்து, கன்னம் ஒட்டி மகா பரிதாபகரமான பார்வையுடன் கூடியமக்கள் நிறைந்திருக்கின்றனர். ஆடு மாடுகளும் அப்படியே. ஏதோ இரண்டொரு குடித்தனக்காரரின் ஆதிக்கம் மிகுந்திருக்கும். வரண்ட கிணறுகள்—வரண்ட காடுகள்—ஒரு புறத்தில் தீண்டா தார் என்போரின் கந்தற் குடிசைகள்—கக்ஷிச் சண்டைகள்—வியாஜ்யம்—கலகம்—வீண் செலவு—ஊர்ப் புறத்தே என்ன குறைந்தாலும் இரண்டு கள் சாராயக்கடைகள்—இது தான் அநேகமாக நமது தற்காலக் கிராமம். இவ் விரண்டையும் ஒப்பிட்டு நோக்குங்கள். உங்கள் மனம் துடிக்க வில்லையா? இரத்தம் கொதிக்க வில்லையா? அவர்களின் 'துயர் துடைப்பேன் அல்ல வெனில் என் உயிர் துடைப்பேன்' என்னும் பேருணர்ச்சி உண்டாக வில்லையா? இல்லை யெனில் நீங்கள் செய்யும் சீர் திருத்தங்க ளெல்லாம் பொய்; பேசும் வாதங்களெல்லாம் வீண்; போடும் திட்டங்க ளெல்லாம் குப்பைக் காகிதங்கள் என மறுபடியும் வற்புறுத்திச் சொல்லுகின்றோம்.

'அது ஒரு காலம். அன்று கிராமங்கள் நன்றா யிருந்தன. கலி முற்றி விட்டது. நம்மா லென்ன செய்யமுடியும்? எல்லாம் வினைப் பயன்' என்று தூங்கிக் கொண்டிருப்போர் சோம்பேறிகள். கிராம மக்களின் அறியாமை வக்கீல்களையும் ஏமாற்றக்காரரையும் ஆடம்பர வாழ்வில் மூழ்கச் செய்கிறது. அவர்கள் கிடக்க. சீர்திருத்தக்காரர் கட்கு ஒருவார்த்தை. கிராம முன்னேற்றத்திற்குக் கங்கணம் கட்டினா லொழிய தேச முன்னேற்றத்தைக் கனவிலுங் காணமுடியாது.

'தற்காலம் நமது கிராமங்கட்கு வேண்டியன யாவை? அடிப் படையாகச் செல்வமும் கல்வியும் தூய்மையுமே யாகும். வரண்டு போயிருக்கும் காடுகளில் வேலையில்லாமல் திண்டாடும் மக்களுக்கு வேறு ஊதியம் தரத்தக்க தொழில்களைக் காட்டவேண்டும். நெசவு, கூடை முடைதல், தச்சுவேலை, கொல்வேலை, சிறு சிறு விளையாட்டுச் சாமான்களைச் செய்தல், செருப்புத் தைத்தல் முதலிய சிறு தொழிற் பயிற்சிக்கான உணர்ச்சியை கிராம ஜனங்களுக்குப் புகட்ட வேண்டும். சாஸ்திரீயமான விவசாயக் கல்வியைப் போதிக்க வேண்

டும். யந்திரக் கலப்பைகளால் நிலத்தை ஆழமாக உழச்செய்ய வேண்டும். வானம்பார்க்கும் காடுகளுள்ள இடங்களுக்குக் கால்வாய்கள் வெட்ட வேண்டும். இவ்வாறு பல வழிகளிலும் நமது கிராமங்களின் செல்வநிலையை உயர்த்த வேண்டும். 'தனி யொருவனுக் குணவிலை யெனில் ஜகத்தினை யழித்திடுவோம்' என்ற உண்மையை வாழ்க்கையில் கொணரவேண்டும். நமது கிராமங்கள் 'கன்னலும் தேனும் கனியுமின்பாலும், கதலியும் செந்நெலும் நல்கு'' மாறு செய்யவேண்டும். இதற்காகச் செய்யும் தொண்டே தெய்வத் தொண்டு எனலாம்.

இப்போது நமது கிராமங்கள் அசுத்தக் களஞ்சியங்களாய் விளங்குகின்றன. அவற்றை யெல்லாம் நாம் நீக்க முயல வேண்டும். 'சேறுபட்ட நாற்றமும் தூறும்சேர்' சிறிய வீடுகளை நீக்கிக் காற்றோட்டமும், பரிசுத்தமும் மிக்க புதுவீடுகள் கட்ட ஏற்பாடு செய்யவேண்டும். ஒவ்வொரு வீட்டைச் சுற்றிலும் ஒவ்வொரு தோட்டம் மணமலர்ச் செடிகள் மிக்கதாய் இலங்கவேண்டும். வீதிகளெல்லாம் மாசு மறுவின்றி விளங்கவேண்டும். ஊர்ப்புறத்து மலஜல விசர்ஜனத்திற்கேற்ற வகைகள் ஏற்படுத்த வேண்டும். மேய்ச்சல் காடுகளும், எருச் சேமங்களும் ஏற்படுத்த வேண்டும். ஆழமான பெரிய கிணறுகள் தோண்ட வேண்டும். சிறு தொழிற்சாலைகளும் வாசகசாலைகளும், புனிதமான பலபல நலங்களும் கிராமத்தைச் சூழவேண்டும். இது ஒரு பெருங்கனவாகத் தோன்றலாம். ஆனால் இக்கனவையே நமது நோக்கமாகக் கொண்டு நாம் வேலைசெய்ய வேண்டும். இருக்கும் வீடுகளைக் காற்றோட்ட முள்ளதாகச் செய்வதும், தெருக்களில் குப்பைகளைக் குவிக்காமல், மலக்காடாக்காம லிருப்பதும், கிணறுகளைப் புனிதமாகக் காப்பாற்றுவதும், வீடுகளிலேயே சிறு சிறு கைத்தொழில்களைச்செய்வதும் இந்நிலையில்கூட அசாத்தியமானு காரியங்களல்ல. இவைகளையேனும் இப்போது செய்யாவிடில் நமது கிரமங்கள் நன்னிலையை அடைவது முடியாது.

மேற்சொன்ன சீர்திருத்தங்களுக் கெல்லாம் அடிப்படையானது கல்வி. தற்காலம் கிராம ஆசிரியர்களாக தாலூக்கா போர்டார்களால் அனுப்பப்படும் ஆரம்ப உபாத்தியாயர்கள் நாட்டுப்புறச் சீர்திருத்தங்களைச் செய்ய ஏற்ற தகுதியுடையவர்கள் என எண்ண முடியவில்லை. எண்ணும் எழுத்தும் கற்பிப்பதோடமையாது விவசாயம், வீட்டுக் கைத்தொழில்கள், பஞ்சாயத்துமுறை, ஐக்கிய நாணய சங்கங்களின் சிறப்பு, சுகாதாரம், சில சிறு மருத்துவமுறைகள் முதலிய யாவும் போதிக்கப்படல் வேண்டும். மற்றும் சிறு கல்விக்கழகங்களையும் நிறுவவேண்டும். போதிய அளவு சரித்திரமும், கணிதமும், விஞ்ஞானமும், தத்துவமும் தெரிந்திருக்க வேண்டும். படிக்க அவகாசமில்லாத கூலி வேலைக்காரர்களுக்காக இரவுப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தவேண்டும். இவைகளைச் செய்யத் தகுதி யுடையவர்களாக கிராம ஆசிரியர்கள் விளங்கவேண்டும். அவர்

கட்குத் தக்க சம்பளம் கொடுக்கவேண்டும். பத்திரிகைகளைத் தருவித்துப் படிக்கத் தெரிந்தவர்கள் படிப்பதோ டமையாது. மற்றவர்கட்கும் படித்துக் காண்பிக்கவேண்டும். 'அமெரிக்க நாட்டில் படியாத ஓர் கூலியாளும் கூட இந்தியாவில் ஓர் கலாசாலை உயர்தரப் படிப்பாளியைக் காட்டிலும் அதிக விஷயங்களைத் தெரிந்துள்ளான். குக்கிராமங்களின் மூலை முடுக்குகளிலுங்கூடப் பத்திரிகைகள் பரவியிருப்பதுதான் அதற்குக் காரணம்' என அமெரிக்கநாட்டைச் சுற்றிப் பார்த்த ஓர் இந்தியப் பெரியார் கூறுகின்றார். ஆனால் பத்திரிகைகள் இந்தியாவில் அவ்வளவு தூரம் பரவவில்லை. அதுவும் கிராமங்களுக்கும் பத்திரிகைகளுக்கும் வெகுதூரம். இந்நிலையை மாற்றி ஒவ்வொரு சிற்றூரிலும் தமிழ்ப்பத்திரிகைப் படிப்பை விருத்தி செய்வதே கல்வியூட்டும் வகைகளில் மிக முக்கியமானது. 'வீடுதோறும் கலையின் விளக்கம், வீதிதோறும் இரண்டொருபள்ளி'' யாக நமது கிராமங்கள் ஒளிரல் வேண்டும். இந்த நோக்கமில்லாத முன்னேற்றப் பேச்செல்லாம் பயனில்சொல்லாகவே முடியும்.

இராமகிருஷ்ண மடத்தார் கிராம நலத்திற்காக எவ்வளவோ செய்கின்றனர். இந்தியக் கிறிஸ்தவ வாலிப சங்கத்தார் அநேக கிராமங்களில் வீதிகளைத் தூய்மை செய்துள்ளனர். தேசத்தொண்டர் என்போர் கட்சிச் சண்டை சுயநலம் இவைகளின்றி இவ்வகையில் வேலைசெய்ய முயற்சித்திருப்பார்களானால் நம் நாடு இப்போது இருப்பதைக் காட்டிலும் மேலான நிலைமையை அடைந்திருக்குமென்பதில் சந்தேகமில்லை. கிராம சீர்திருத்த வேலையை மாணவர்கள் மேற்கொள்ளல் பல விதத்திலும் நலந்தருவதாகும். பொதுவாக எல்லா மாணவர்களும், சிறப்பாக நகரங்களில் படிக்கும் கிராம மாணவர்களும் இச்சேவையில் முழு மனதுடன் இறங்கவேண்டும் என்று நாம் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறோம். அவர்களுக்குத் தங்கள் ஊர்களில் தக்க மதிப்புண்டு. அதுவும் தவிர உயர்தரப் படிப்புப் படிக்கவரும் கிராம மாணவர்கள் பணக்காரர்களே யாவர். ஆகவே செல்வமும், அதிகாரமும், தகுதியும் மிக்க இவர்கள் மற்ற சீர்திருத்தக்காரரைவிட வெகு எளிதில் கிராமங்களை முன்னேற்றமடையச் செய்யலாம். எல்லாரும் இவர்களது ஊழியத்தை ஆதரித்து ஊக்க மளிக்கவேண்டும். நாட்டுப் புறங்களில்தான் நகரங்களின் ஜீவசத்து அடங்கி யிருக்கிறது. நமது ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு 'சாந்தி நிகேத' னாகத் திகழவேண்டும். நிறைந்த செல்வம், அறிவு, இன்பம், யாவும் திரண்டு நமது கிராமங்கள் நலம் பெற்றோங்குக. தனவந்தர்களே, ஏழைகளே, அறிவாளிகளே, ஆண்மையாளர்களே, மாதர் மணிகளே உங்கள் எல்லோருக்கும் ஒரு விண்ணப்பம்! இப்பெருங் காரியத்திற்கு உதவி செய்வீர்களாக.

ஓம் தத் ஸத்.

---

# ஆனந்த சந்திரோதயம்.

S. V. V.

"எதிலும் அந்தரார்த்தம் உண்டு" 'வேலன்' என்பது முருகக் கடவுளுக்குள்ள பெயர்களிலொன்று. அதாவது வேலைத் தன்கரத்தில் ஏந்தியவன் என்பது அப்பெயரின் பொருள். கூர்ந்து நோக்குமிடத்து உலகத்தைக் காத்தலாகிய வேலையைப் பூண்டு விளங்குபவன் என்ற உட்பொருள் அதில் தொனிக்கிறது. கண்ணனைச் சிசுபாலன் பன்முறை 'இடையன்' என்றிகழ்ந்தான். அதற்கு பகவான் சிறிதும் கோபிக்கவில்லை; அதைப் போற்றுத லாகவே கொண்டார். ஏனெனில், அவர் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய மூன்று தொழில்களில் இடைத்தொழில் புரிபவர்; பாண்டவர்க்கும் துரியோதனாதி யோர்க்கும் தூதுவனாக இடைத்தொழில் புரிந்தவர்; உலகத்துவாழும் மக்களின் உடம்பையும் உயிரையும் வளர்க்கும் பால், தயிர், நெய் முதலியவற்றைப் பெருக்கும் இடைத்தொழில் புரிவார் குலத்தின்கண் வளர்ந்தவர். இன்னும் எவ்வளவோ சொல்லலாம். ஆதலின், உற்று நோக்கின் ஒரு சொல்லிற்கே பல பொருள்களுண்டு. ஞானிகள் உட்பொருளைக்கண்டு என்றும் ஆனந்திக்கிறார்கள். பேதைகள் மூடவாதம் செய்கிறார்கள்.

***

"பசியுள்ளவன் ருசி அறியான்" மிகுந்த பசியுள்ளவனுக்குத் தான் உண்ணும்பொருள்களின் ருசி முதலில் தெரிகிறதில்லை. ஆனால் பசியில்லாதவனுக்கோ 'பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை நாலுங்கலந்து' வைத்தாலும் அவ்வுணவிற்கு அவன் ஒரு சொட்டுச் சொல்லாம விருப்பதில்லை. பசித்தவன் உண்டபின்னரே 'கறிக்குச் சிறிது உப்பு அதிகமா யிடப்பட்டிருந்தது' என்று கூறுவான். அதுபோலப் பராபர வித்தையில் ஆவலுள்ளவன் முதலில் யாவற்றையும் கற்றுணர்ந்து, பிறகு அவற்றுள் அருசியான பாகங்களை மட்டும் நீக்கிச் சத்விஷயத்தைக் கிரகித்து இன்ப மடைகிறான். தாக விடாய் கொண்டவன் தாக சாந்தியின் பொருட்டு சேறான தண்ணீரா யிருந்தாலும் அதனை முதலிற் பருகி விடுகிறான். ஆதலின் இவ்வுலகிற் பிறந்த எவரும் ஏதேனும் ஒரு மதத்தைக் கடைப்பிடித்தே தீரவேண்டும். அது கிறிஸ்தவ மதமாயிருப்பினுஞ் சரி; ஹிந்து மதமாயிருப்பினுஞ் சரி; முகம்மதிய மதமாயிருப்பினும் சரியே; எல்லாவற்றிலும் ஈஸ்வரன் விளங்குகிறார் என்ற ஐக்கியபாவம் பாரமார்த்திக தாபமுள்ளவனுக்கே உண்டாகிறது. அவன் மததூஷணை புரிவதில்லை.

***

"நாயினுங் கடையேனுக்கு நல்லதவிசிட்டு" என்று பக்தர்கள் தங்களைத் தாழ்த்திச் சொல்லிக்கொள்ளுவது வழக்கம். 'நான்' என்ற அகந்தை நீங்குவதற்கு இது ஓர் முக்கிய சாதனமாகும். அகந்தை அந்தகாரத்தி லழுத்தி விடுமாதலின் பக்தர்கள் எப்பொழுதும் 'அடியேன்' என்று சொல்லிய வண்

ணம் அடங்கிய தன்மையை பழக்கத்திற்குக் கொண்டுவந்து விடுவார்கள். பக்தியானது பரபக்தி என்றும், அபரபக்தி யென்றும் இருவகைப்படும். பர பக்தியாவது நிஷ்காமியபக்தி; அதாவது உலகப் பொருள்களிடத்து இச்சை யொழித்து பகவானிடத்தில் எதையும் யாசியாது மோக்ஷ ப்ராப்தியை மட்டும் இரந்து நிற்றல். அபர பக்தியாவது காமியபக்தி; தன தானியம், புத்திர பௌத்திரர்கள் முதலிய இக சம்பத்துக்களை விரும்பி இருத்தல். இந்திரியங்களை வென்று, பற்றற்று பகவானையும் பற்றற்ற பரமென்று ஆஸ்ரயிக்கும் துறவிகள் பரபக்தியுடையவர்கள். அபர பக்தர்கள் கேவலம் பகவானிடத்து வர்த்தகம் புரிபவர்கள். ஒரு பக்தர் நாயினுங் கடையேன் என்று தம்மைச் சொல்லிக்கொள்வதில் இன்னுமொரு விசேஷமுண்டு. நாயானது, தன் யஜமானன் தன்னை வெகு தொலைக்கப்பால் கொண்டுபோய் விட்டாலும் அது திரும்ப வீட்டிற்கு வந்துவிடுகிறது; அடித்து இம்சித்தாலும் வாலைக்குழைத்து உறவாடுகிறது; அநேக விதமாக உடையுடுத்து நிற்கும் பலர் நிறைந்தகூட்டத்தில் தன் யஜமானனைக் கண்டுபிடித்து விடுகிறது; யஜமானனது வீட்டில் திருடர்கள் நுழையாவண்ணம் காக்கின்றது. அதுபோல பரமபக்தர்கள் அரம்பையென்னும் அணங்கை நிகர்த்த இளமங்கையின் முன் தாம்கொண்டு போகப்பட்டாலும்கூட அவர்கள் 'தாயே' என்று அவளுடைய காலில் விழுந்து நமஸ்கரிக்கின்றனர்; எவ்வளவு நிதி தமக்கு வருவதாயினும் நெறி தவறிச் செல்லாது தமது மனமாகிய கோயிலிலேவைத்து மனனம் பண்ணும் பகவானிடத்திலே திரும்பி விடுகிறார்கள். எந்ததேசத்தில் எந்தக் கோயிலுக்கு முன் செல்ல நேரிட்டாலும் 'பகவான் பற்பல சமயத்தவர்களுக்குப் பற்பல குணரூப விசேஷங்களைத்தோன்றி அருள் பாலிக்கின்றார்' என்று தாம் கற்றதையும் கேட்டதையும் அனுபவித்து, தெய்வநிந்தனை புரியாது ''ஆகாசாத் பதிதம் தோயம் யதாகிச்சது சாகரம், சகல தேவோ நமஸ்காரஹ: ஸ்ரீகேசவம் பிரதிகச்சதி'' என்று வழிபடுகிறார்கள்; பகவான் சோதனையின் பொருட்டு எவ்வளவு துன்புறுத்திச் சோதித்தாலும் 'பாழுந் தெய்வமே! உன் கோயிலில் இடிவிழ' என்று நிந்திப்பதும், சுகமருளினால் அதன்பொருட்டு 'எனையாளும் தெய்வமே உன் கோயிலில் நெய்விளக் கேற்றுகிறேன்' என்று வாழ்த்துவதும் இல்லை; பர சுகத்திற்காக இகத்தில் துன்பங்களைப் பொறுமையுடன் ஏற்று பகவானை அனவரதமும் துதிப்பார்கள்; மனமாகிய கோயிலை, காமக்ரோதாதி திருடர்கள்வந்து கொள்ளை கொள்ளாவண்ணம் பகவந் நாமத்தைப் பரவிக் காப்பார்கள்; இவ்விதம் மேற்கூறிய நாய்க்குரிய சுபாவங்கள்கூடத் தமக்குப் பரிபூர்ணமாக ஏற்படவில்லையே? கேவலம் மனிதப்பிறவிக்கு ஏற்றிக் கூறப்படும் உயர்வு தாழ்வுகளைத் தெய்வத்திற்கும் கற்பிக்கும் அசட்டுத்தனம் சட்டென்று விலகவில்லையே! என்பதுதான் அடியார்கள் இரங்கித் தம்மை நாயினுங்கடையேன் என்று சொல்லிக் கொள்ளுவதின் கருத்து. ***

**"அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன்"** என்றார் ஆழ்வார். தனவந்தர்களை ஏழைகள் அண்டி அவர்களுடைய தயவைநாடி ஏவல் வழி நின்று நடப்பதெல்லாம் எதன் பொருட்டு? சோர்ந்தவிடத்து அவர்கள் தமக்குத் துணையாவார் என்ற கருத்து பற்றியே யல்லவா? ஆதலின், செவி வாய் கண் மூக்கு முதலியன தளர்ச்சியுற்று அடியேன் பரிதபிக்குங்கால், ஜகத்பிரபுவாகிய நீர் அடியேனுக்குத் துணையாவீர் என்ற நம்பிக்கை அடி யேனுக்கு நிச்சயமாக உண்டு' என்று ஆழ்வார் பகவானைநோக்கி யருளிச் செய்ய, அதற்கு எம்பெருமான் 'எனது துணையை நாடும் அத்துணை யோக்ய தையை நீ அடைந்து விட்டதாகக் கருதுகின்றனையோ ?' என்று வினவினர். அப்பொழுது ஆழ்வார் 'அவ்விதத்தகுதி எனக்கு ஏதும் இல்லையாயினும் உமது நிர்ஹேதுக கிருபையைக்கண்டு நீர் அடியேனையும் காப்பீர் என முழு நம்பிக்கை யுடனேயே வந்தடைந்தேன்' என, பெருமான், 'நான் அப்படி எவருக் கேனும் துணைபுரிந்ததை நீ அறிவாயோ ?" என்று கேட்டருள ஆழ்வார் என்னப்பன் அகப்பட்டார் பக்திவலையில் என்றக மகிழ்ந்து 'அறிவேன்! அறி வேன்! யானைக்கருள் செய்தமையை' என்றார். எம்பெருமான் 'ஆனால் கஜேந்திராழ்வானைப் போல் நீ உனக்குத் துன்பம் நேரிடும்போது என்னை நினைப்பாயானால் அவ்வமயம் வந்து ரக்ஷிக்கிறோம்" என்றுரைத்தருள ஆழ் வார் 'கூற்றுவன் வந்தென்னை துன்புறுத்தும்போது அடியேன் உம்மை நினைக் கக்கூடும் என்ற நிச்சயமென்ன ?' என்றார். எம்பெருமான் 'ஆனால் நீ என்ன தான் செய்ய மாட்டுவை' என்று கேட்க, ஆழ்வார் 'அப்போதைக் கிப்போ தே சொல்லிவைத்தேன், இதை நீர் ஞாபகத்தில் வைத்திருந்து அந்தசமயம் வந்தென்னை ரக்ஷித்தருளவேணும்' என்று விண்ணப்பிக்க, பகவானும் ஒப்பிச்சென்றார். பக்தர்கள் எந்த விதத்தில் கட்டுப்படுத்தினாலும் பகவான் அவர்கட்குச் சுவாதீன ராகின்றார்.

***

**"வாசத்திற் பெரியது விசுவாசம்"** மதப்பற்றுடையவர்கள் ஒருவரை யொருவர் சந்திக்க நேரிடுங்கால் 'தாங்கள் எந்த க்ஷேத்திரவாசி' என்று முதலில் கேட்பதுண்டு. அதற்கு அவர்கள் தாங்கள் வசிக்கும் க்ஷேத்திரத் தின் பெயரையோ, அல்லது தமது ஊருக்கருகேயுள்ள திருப்பதியையோ குறிப்பிட்டுரைப்பது வழக்கம். எங்கு வசித்தாலென்ன? பகவானிடத்திலே விசுவாச முள்ளவர்கள் எங்கு வசித்தாலும், பகவான் அவர்களிருக்கும் இடத்திலும் வசிக்கின்றார். மகான்கள் விசுவாசத்தையே பெரிதும் உடைய வர்கள். அதல்லாமல் 'நான் ஸ்ரீரங்க க்ஷேத்திரவாசி' என்று சொல்லிக் கொண்டு ஸ்ரீ ரங்கநாதனிடம் தினையளவும் பக்தியில்லா திருப்பதால் பய னென்ன ? அதனால் வீண் பிரமையும் அறியாமையுமே வளரும்.





# வேதாந்த சாரசங்கிரக வசனம்.

**(பூ. ஸ்ரீநிவாசன்.)**

(362-ம் பக்கத் தொடர்ச்சி.)

**சீடன்:**—குருநாதா! அடியேனுக்கு ஓர் சந்தேகம் தோன்றுகிறது. அதனைக் கேட்க உத்தரவளிக்க வேண்டும். மூர்க்கனுடைய வார்த்தையைப் பெரியோர் குற்றமாகக் கருதமாட்டார். ஆதலால் எனது கேள்வி குற்றமுள்ளதாயினும் மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன். அதாவது:—

ஆத்மாவேறு, சுகம்வேறு. ஆத்மாவிற்குசுகரூபத்தன்மை யில்லை. அங்ஙனமின்றி, தானே (ஆத்மாவே) சுகவடிவினனாயிருந்தால் பிராணிகள் சுகத்தையடைய வேண்டு மென்று பிரயத்தினம் செய்யவேண்டிய அவசியமில்லையே. ஆனால் சகலரும் சுகத்திற்காக முயல்கின்றனர். சுவாமி! இச்சந்தேகம் எனக்குண்டாகின்றது. இதனை நிவிர்த்தி செய்தருளவேண்டும்.

**குரு:**—அன்புள்ள மாணவ! மூடன், தான் ஆனந்தரூபன் என்னும் விஷயத்தை அறியாமையால் தனக் கந்நியமாகவுள்ள விஷய சுகங்களைக் குறித்து முயற்சி செய்கிறான். தன்னை ஆனந்த ரூபனாக வறிந்த பண்டிதனோ அவ்வாறு பாகிய சுகத்திற்காக எத்தனஞ்செய்யான். எவ்வாறெனின்; தன் வீட்டிலிருக்கும் நிக்ஷேபத்தை யறியாத மூடன் பிட்சையெடுத்துத் திரிவான். தன் வீட்டில் நிக்ஷேப மிருக்கிறதென்றறிந்த விவேகி பிட்சைக்காகத் திரிவானோ? திரியமாட்டான்.

தூலம் சூக்குமம் என்னும் இரண்டு சரீரங்களும் இயல்பாகவே துக்கரூபமானவை. மூடன் சுகவடிவினனாகிய தன்னை மறந்து தூல சூக்கும சரீரங்களே தானெனப்பாவித்து துக்கத்தையே தரும் தாரபுத்திராதிகளால் தனக்குச் சுகம் கிடைக்கு மென்றெண்ணி அதனைப் பெறமுயல்கிறான். துக்கத்தைத் தரும் பொருள் சுகத்தைத் தரவல்ல தாமோ? மரணந்தரும் விஷமானது தன்னை யருந்தினவனுக்கு மரண மின்மையை யுண்டாக்க வல்லதாமோ? ஆகையால் மூடன் தான்வேறு சுகம்வேறு என்று நிச்சயித்தே அன்னிய சுகத்திற்கு முயல்கிறான். இதில் எவ்வளவும் சந்தேகமில்லை.

இவ்வுலகத்தில் சகல பிராணிகளுக்கும் தமக்குப் பிரியமான வஸ்துக்களின் நினைப்பினாலும் தரிசனத்தினாலும் அனுபவத்தினாலும் ஆனந்தம் தோன்றுகின்ற தல்லவா? அந்த ஆனந்தம் எதனுடைய தென்று (அப்பொருளினிடத்திலிருந்து உண்டாகின்றதா? தன்னிடத்திலிருந்து உண்டாகின்றதா? வென்று) விசாரிப்போம்.

வேறொரு வஸ்துவைத் தானனுபவிக்கும் பொழுது உண்டான ஆனந்தம் அந்த வேறு வஸ்துவினுடைய தன்று. ஏனெனில்? அந்த ஆனந்தம் எங்கே காணப்படுகின்றது? மனத்திலன்றோ காணப்படுகின்றது? அந்த ஆனந்தம் வஸ்துவின் தர்மமாயின் மனத்தில் எங்ஙனம் காணப்படும்? யோசித்துப்பார். ஒருவஸ்துவின் தர்மம் அந்த வஸ்துவை விட்டு வேறிடத்திலிராது. ஆதலால் மனத்தில் தோன்றும் இந்த ஆனந்தம் வஸ்துவின் தர்மமாகாது.

**சீடன்:**—சுவாமி! அங்ஙனமாயின் (ஆனந்தம் வஸ்துவின் தர்மமாகாது மனத்தின் தர்மமாயின்) வஸ்துவில்லாத போதும் மனத்தில் ஆனந்தம் தோன்ற வேண்டுமே! அங்ஙனமில்லையே. இல்லாமையின் மனத்தின் தர்மமென்று மாத்திரம் எங்ஙனம் கூறலாம்?

**குரு:**—உன் கேள்வி சரியானதே. வஸ்துவில்லாதபோது ஆனந்தம் காணப்படாமையின் அது மனோதர்மமு மன்றாம். ஏனெனில் தர்மத்தை வெளிப் படுத்தும் வஸ்து இல்லாவிடின் தர்மம் காணப்படாது. பதார்த்தமிருப்பினும் சிலசமயங்களில் ஆனந்தமுண்டாதலில்லை. ஆனந்தத்தை யுண்டாக்கத்தகுந்த வஸ்து இருக்கும் போதும் ஆனந்தந் தோன்றா திருப்பது சரியல்லவே. ஒருகால், துரதிருஷ்டம் இதற்கு (இவ்வாறு ஆனந்தம்தோன்றாதிருப்பதற்கு) காரணமாயிருக்குமோ வென்றால் அதுவும் சரியான சமாதானமாகாது. ஏனெனின், துரதிருஷ்ட மிருந்தால் பிரியவஸ்துவே சித்திக்காது. ஆகையால் துரதிருஷ்டமில்லை யென்று ஒப்பிச்சீரவேண்டும். இதனால் ஆனந்தம் மனத்தின் தர்மமாகாது. ஆத்மாவின் தர்மமோவென்றால், ஆத்மா நிர்க்குணனாகலின் அதுவும் சரியன்று. வஸ்துவின் தர்மமுமன்றென்பது முன்னரே நிச்சயிக்கப்பட்டு விட்டது. மற்றெதன் தர்மமோவெனின்: புண்ணியத்தின் பயனாகப் பிரியவஸ்து கிடைத்தகாலத்தில் நிர்மலஜலத்தில் காணப்படும் சந்திரன்போல சத்துவகுணப் பிரதானமான சித்தத்தில் ஆனந்த ரூபனாகிய ஆத்மாவே பிரகாசிக்கிறான். இவ்வாறு சித்தத்தில் பிரதிபலித்த ஆசை (சாயை) வடிவமான ஆனந்தம் புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வுகளுக் கேற்ப ஏற்றத்தாழ்வாயிருக்கின்றது. இந்த ஆனந்தம் அசாஸ்வதமானது. மேலும் இதுவே மேலான ஆனந்தமுமன்று. இதனினும் மேலான ஆனந்தம் வேறொன்றிருக்கும். புண்ணியம் நசிக்கு மிடத்து இதுவும் நசிக்கும். இதுவே விஷயானந்தம் என்றழைக்கப்படுகிறது. (இது விஷயமாக ஸ்ரீ விசாரசாகரம் கூறுவது இங்குணரற்பாலதாம். அதாவது எவன் புத்தி ஆத்மசொரூபத்தை யறியவில்லையோ அவனுக்கு விஷயத்தில் இச்சை யுண்டாகிறது. இவ்விடத்தில் போகசாதனமே விஷயமெனப் படுகின்றது. ஆதலால் தன புத்ராதிகளையும் கொள்ளவேண்டும் என்பதாம்.)

1. அவ்விஷய விச்சையினால் புத்தி சஞ்சலமாயிருக்கும். அச்சஞ்சல புத்தியில் ஆத்மசொரூபானந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.

2. இச்சித்தவிஷயம் கிடைத்தவுடன் க்ஷண மாத்திரம் புருஷனது புத்தி ஸ்திரப்பட்டு அதன் விருத்தி அந்தர்முகமாகின்றது. அந்த அந்தர்முக விருத்தியில் ஆத்மாவின் சொரூபானந்தம் பிரதிபிம்பிக்கிறது.

அந்த ஆத்மசொரூப ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தை யனுபவிக்கிற புருஷ

னுக்கு " எனக்கு விஷயத்தா லாநந்த முண்டாயிற் " றென்று பிராந்தி யுண்டாகிறது. ஆனால் விஷயத்தி லானந்தமில்லை.

(விசாரசாகரடிப்பணி:— ஆத்மசொரூப ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை அநுபவித்துப் புருஷனுக்கு விஷயத்தில் ஆநந்தத்தின் பிராந்தி யுண்டாகின்றது. அது, நாய்க்குப் பசையற்ற எலும்பைக் கடித்து தனது தாடையிலிருந்து வரும் இரத்தத்தைச் சுவைக்க அவ்வெலும்பிலிருந்து வருவதாகப் பிராந்தி யுண்டாவது போலாம்.)

1. ஒருகால் விஷயத்தில் ஆநந்த முண்டாகுமாயின், ஒரு விஷயத்தி லாநந்த மடைந்தவனுக்கு மற்றொரு விஷயத்தில் இச்சை யுண்டாகும் போதும், முந்திய ஆநந்தம் இருந்துகொண்டே யிருக்கவேண்டும். ஆனால் அநுபவத்தில் அப்படியில்லை. இரண்டாவது, விஷயத்தினிச்சையால் புத்தி சஞ்சலப்படுவதால் அச்சஞ்சல புத்தியில் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.

2. விஷயத்திலேயே ஆனந்த முண்டாகுமாயின், ஒருவனுடைய பிரியமான புத்திரன் அல்லது மிகுந்த பிரியமுள்ள மற்றொருவன் வெகுகாலம் தேசாந்தரம் போயிருந்து வந்தவுடன் அவனைப் பார்த்தவுடனே முதலில் உண்டாகும் ஆநந்தம் எதுவோ அது மறுபடியும் எப்போதும் இருப்பதில்லை. அது மாறாமல் நீடித்திருக்கவேண்டும். ஏனெனின் அந்த ஆநந்தத்துக்குக் காரணமான புருஷன் சமீபத்திலேயே இருக்கிறான். ஆனால் அநுபவத்தில் அப்படி நீடித்திருப்பதில்லை. முதலிற்றான் ஆநந்தம் பொருந்துகின்றது; எப்போதும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் ஒருமுறை புருஷனைக் கண்டவுடன் விருத்தி ஸ்திரப்படுகிறது. மறுபடியும் விருத்தி வேறு விஷயத்தில் சென்று சஞ்சலப்படுவதால் முந்திய ஆநந்தம் விளங்குகிறதில்லை. ஆதலால் பதார்த்தத்தா லாநந்தம் இல்லை.

3. அல்லது விஷயத்தில் ஆநந்தமுளதாயின் சமாதியிலுண்டாகிற யோகாநந்தத்தின் (சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையாகிய யோகத்தினால் வெளிப்படக்கூடிய ஆநந்தம்) விளக்கமுண்டாகலாகாது. ஏனெனின் சமாதியில் ஓர் விஷய சம்பந்தமு மில்லை.

4. அல்லது விஷயத்திலேயே ஆநந்தமுளதாயின் சுழுத்தியில் ஆநந்தத்தின் பாவம் (தோற்றம்) உண்டாகலாகாது. ஏனெனின் சுழுத்தியிலும் ஒரு விஷயத்தின் சம்பந்தமுமில்லை. ஆதலால் விஷயத்தி லாநந்தமில்லை. ஆனால் ஆத்ம சொரூபாநந்தம் முழுவதும் விளங்குகிறது.)

புண்ணியத்தை யாசிரயித்து அதன் பலனாக வுண்டான விஷயானந்தத்தை யனுபவிப்போர் முடிவில் மிகுந்த துக்கத்தை யனுபவித்தேயாக வேண்டும். மேலும் அனுபவிக்குங் காலத்தும் தம்மினும் மிகுந்த ஆனந்தத்தை யனுபவிப்போரைப் பார்த்து துக்கப்படுவதனால் துக்கந்தருவதாகவே யிருக்கிறது. ஆதலால் விஷயசுகம் துக்கக்கலப்புடையதா யிருத்தலின் விஷத்தோடு கூடிய அன்னத்திற்குச் சமானமானதாகும். விஷய சுகம் (எல்லோரிடத்தும் ஒருவிதமாகவிராமல்) ஏற்றத்தாழ்வுடையதாகலின் தான் அனுபவிக்கும் பொழுதே தன்னைக் காட்டிலும் அதிக சுகத்தை யனுபவிப்பவர்களைப் பார்க்கையில் துக்கத்தையே யுண்டாக்கும்; அழியு மென்னும் பயத்தினால் இறுதியிலும் துக்கத்தையே கொடுக்கும். அரசர்பதவிகளையடைந்தவர்களுக்குள் ஏற்றத்தாழ்ச்சி எங்ஙனமுளதோ மனிதருக்கும் பிரஹ்ம பதவி முதலிய பதவிகளை யடைந்தவர்களுக்கும் உண்டாம் சுகத்திலும் ஏற்றத்தாழ்வு

அங்ஙனமே உளதாம். அதனால் துக்கமுமங்ஙனமே யுளதாம். ஆதலால் இத்தகைய விஷய சுகத்தை மூடர் இச்சித்தாலும் விவேகிகள் சிறிதும் விரும்பார்.

பிரதிபிம்ப வடிவமாகிய இந்த விஷயானந்தத்திற்கு ஆதாரமாகவுள்ள (பிம்பத்தின்) ஆனந்தமே பரமாத்மாவாகும். அந்த ஆத்மானந்தம் எப்பொழுதும் அழியாதிருப்பதும் பயமற்றதும் பரிபூரணமானதும் அபின்னமானதுமாகும். இந்த ஆத்மாநந்தம் பிரதிபிம்பமாகிய விஷயானந்தத்தினால் ஊகிக்கப்படுகின்றது. பிரதிபிம்பம் பிம்பத்தை விட்டு எப்போதுமுண்டாகாது. ஆகையால் பிரதி பிம்பமாகிய விஷயானந்தத்தினால் பிம்பமாகிய ஆத்மானந்தம் ஊகிக்கப்படுவது நியாயமேயாகும். அந்த ஆத்மானந்தத்தை யுடையவர்களாயிருந்தாலும் மூடர்கள் அதனை அனுபவிப்பதில்லை.

முன்கூறப்பட்ட இந்த ஆத்மா அவித்தையின் காரியமாகிய உலகத்திலும் கரணங்களாகிய இந்திரியங்களினிடத்தும் சாக்கிராவத்தையிலும் சொப்பனாவத்தையிலும் அறியப்படுவதில்லை. தூக்கவடிவமாகிய தூலசரீரமும் சூக்கும சரீரமும் சுழுத்தியில் லயமாகும்போது ஆனந்த வடிவினனாகிய அந்தவாத்மா அறியப்படுகிறான். இந்த நித்திராவத்தையில் ஆனந்த வடிவினனும் இரண்டாவதில்லாதவனுமாகிய ஆத்மா மாத்திரம் இருக்கின்றானன்றி யாதொரு விஷயமாயினும் புத்தியாதிகளிலெதுவாயினும் இல்லையன்றோ? அவித்தையின் காரியமாகிய கரணங்களின் கூட்டம் இல்லாமையினாலேயே சுழுத்தியில் ஆத்மா அறியப்படுகிறான். தூங்கியெழுந்த ஒவ்வொருவனும் தான் ஆனந்தமே வடிவாகவுடையவனென்று எண்ணுகின்றனன். இதில் சந்தேகமில்லை. ஞான புத்திரா! நீயும் தூங்கியெழுந்து நான்சுகமாய்த் தூங்கினேனென்று உனது சுகரூபத்தன்மையை நினைத்துக்கொண்டிருக்கிறாய்.

உபநிஷதார்த்தத்தை யறியாது சிலர் தூக்கமின்மையே சுகமெனக் கூறுவர். அது சாரமற்ற மித்தியா வார்த்தையாகும். ஏனெனின், துக்க மின்மை மண்ணாங்கட்டி முதலியவற்றினிடத்தும் இருக்கின்றது. ஆனால் அவற்றினிடத்துச் சுகம் அணுவளவேனு முளதோ? இல்லை; இது எல்லார்க்கும் பிரத்தியட்ச அனுபவமே. ஆதலால் துக்காபாவம் சுகமாகாது. ஆத்மா சத்ரூபனென்றும் சித்ரூபனென்றும் ஆனந்த ரூபனென்றும் சுருதி நிரூபித்து ஆத்மா ஆனந்த கனமானது என்று கூறுகின்றது. கிருதகிருத்தியரும் புத்திசாலிகளும் பிரஹ்மவித்துக்களும் சற்சன சிரேஷ்டருமாகிய மகாத்மாக்கள் சமாதியில் ஆத்மாவை ஆனந்த வடிவினனாக அனுபவிக்கின்றனர். இதிற் சந்தேகமில்லை. பிரமா முதலாகவுள்ள சகல பிராணிகளும் பரமாத்மாவின் ஆனந்தரூபமாகிய அம்சத்தையே (பாகம்) தத்தம் உபாதிக்கேற்றபடி அனுபவிக்கின்றன. பக்ஷணங்களில் ஆனந்தகரமாய் இனிமையாகவுள்ள எந்த ரசமுளதோ அந்த ரசம் வெல்லத்தினுடையதேயன்றி வேறெதிலும் இனிமை இல்லை. அப்படியே, விஷயச் சேர்க்கையால் எந்த ஆனந்தம் காணப்படுகின்றதோ அந்த ஆனந்தம் பிம்பத்தின் ஆனந்தத்தினது பாகத்தின் பிரகாசமேயன்றி ஜடபதார்த்தங்களினுடையதன்றாம். எந்தவொரு பதார்த்தத்தின் சம்போகத்தினால் எந்தவொரு பிராணியிடத்தும் எந்த ஆனந்தம் காணப்படுகின்றதோ அந்த ஆனந்தம் பரப்பிரஹ்மத்தினுடைய பிரகாசரூபமேயாகும். ஆகையால் ஆத்ம வஸ்துவின் பிரகாசத்தினாலன்றி வேறெவ்வகையாலும் ஆனந்தோதய முண்டாகாது. (தொடரும்.)



ஆரிய சித்தாந்தம்

## உலக ஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

(358-ம் பக்கத் தொடர்ச்சி.)

புத்திமான்களுடைய உபதேசத்தைக் கேட்கிறவனும், நீதியை அனுசரிக்கிறவனும், சுயாதீனமாயிருக்கிறவனும், தேவ பிதிர்க்களுக்கு நைவேத்தியம் செய்து பின் புசிக்கிறவனும், பொறாமையில்லாதவனும், பிறருக்கு யாதொரு துன்பமும் செய்யாதவனும், நன்றியுள்ளவனும், உண்மையுள்ளவனும், வணக்கமுள்ளவனும், படித்தவனுமாகிய இவர்கள் சொர்க்கத்தை அடைவார்கள். எல்லாருக்கும் பிரியமான வசனங்களைப் பேசுகிறவன் நிறைந்த செல்வத்துடன் எப்போதும் வாழ்வான். நன்றாய்ப் பேசுகிறவன் கிடைப்பது அரிது. அப்படிப் பேசுகிறதைக் கேட்கிறவன் அகப்படுவதும் அரிது. ஒவ்வாத வார்த்தைகளே எல்லாருக்கும் சாதாரணமாயிருக்கின்றன. எஜமானனுக்குப் பிரியமானதையாவது அப்பிரியமானதையாவது பேசாமல் தர்மத்தையே நோக்குகிறவன் சொல்கிற இனிமையற்ற வசனங்களே உண்மையில் சிறப்பாகும். அவனே உண்மையில் பலத்தைச் சேர்க்கிறான். ஒரு குடும்பத்துக்காக ஒரு மனிதனை விட்டு விடலாம். ஒரு இராஜ்யத்துக்காக ஒரு கிராமத்தை அழித்து விடலாம். தன் நிமித்தம் பூமி முழுவதையும் விட்டு விடலாம். தனக்கு ஆபத்து வரும் என்கிற நோக்கத்தால் தன் செல்வத்தைப் பாதுகாக்க வேண்டும். செல்வத்தினாலே தன் மனைவியைக் காப்பாற்ற வேண்டும். மனைவி செல்வமிரண்டாலும் தன்னைக் காப்பாற்ற வேண்டும். ஆதிகாலத்திலிருந்து சூதாடுகிறது சண்டையை உண்டாக்குமென்று அறியப்பட்டிருக்கிறது. ஆகையால் புத்திமான்கள் விளையாட்டுக்காகக்கூட அதை அனுசரிக்கக் கூடாது. வெறுப்பு இல்லாத தன்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனும் தன் நன்மையை நாடுகிறவனுமான வேலைக்காரனை எஜமான் நேசிக்கிறான். அதனால் வேலைக்காரன் தன் எஜமானுடைய கஷ்ட காலத்திலும் அவனை விட்டு விலகாமலிருக்கிறான். வேலைக்காரனுடைய மானியத்தைப் பிடுங்கிக்கொண்டாவது அவன் சம்பளத்தை நிறுத்தியாவது ஒருவன் திரவியம் சேர்க்கப்படாது. ஏனென்றால் பிரியமுள்ள மந்திரிகள்கூடத் தமது ஜீவனாதாரம் கெட்டுப் போனால், தங்களுடைய எஜமானனுக்கு விரோதியாய்க் கஷ்ட காலத்தில் அவனைக் கை விடுகிறார்கள்.

உத்தேசித்திருக்கிற காரியங்களை நினைத்து வேலைக்காரர்களுக்குச் சம்

பளத்தையும், உபகாரச் சம்பளத்தையும் கொடுத்து, வேண்டும் செலவுக்கும் பணம் கொடுத்து அவர்களைத் தனக்குத் துணையாகக் கொள்ளவேண்டும். ஏனென்றால் துணைவர்களால் நிறைவேற்றப்படாதது ஒன்றுமில்லை. தன் அரசனுடைய எண்ணத்தை நன்றாய் அறிந்துகொண்ட உத்தியோகஸ்தன் சகல காரியங்களையும் உற்சாகத்துடன் செய்து முடிப்பான். தன் எஜமானனுடைய எண்ணத்தை அறிந்து அவனிடத்தில் விசுவாசமும் மரியாதையுமுள்ள வேலைக்காரன் தன் எஜமானுடைய நன்மையைப் பற்றியே எப்போதும் பேசுவான். தன் சொந்த வல்லமையையும், தான் யாருக்கு விரோதமாய்க் காரியம் செய்யத் தொடங்குகிறானோ அவனுடையதையும் தெரிந்து கொள்ள வேண்டியது அரசனுடைய இரண்டாவது வேலை. தன் எஜமான் கட்டளையை அவமதிக்கிறவனும், இட்ட வேலையைச் செய்யமாட்டேனென்று மறுக்கிறவனும், தன் பத்தியினாலே இறுமாந்திருக்கிறவனுமான வேலைக்காரனை உடனே விலக்கிவிட வேணடும்.

கர்வமின்மை, வல்லமை, தாமதம் பண்ணாமை, பட்சம், சுத்தம், பிழை செய்யாமை, வியாதில்லாத உயர் குடிப்பிறப்பு, நல்ல பேச்சு என்கிற இந்த எட்டுக் குணங்களையும் உடையவர்களே வேலைக்காரர்களாயிருக்கத் தக்கவர்களாம். அஸ்தமித்த பிறகு தன் பகைவனுடைய வீட்டுக்கு எவ்வகையிலும் போகக்கூடாது. இரவில் ஒருவனுடைய வீட்டு முற்றத்தில் பதுங்கி யிருக்கக்கூடாது. அரசனால் விரும்பப்பட்டிருக்கிற ஸ்திரீயை இச்சிக்கக் கூடாது. இழிந்த சேர்க்கையுள்ளவனும், தான் கண்டவற்றைப்பற்றி யோசனை கேட்கிறவனுமான ஒருவனுடைய தீர்மானத்துக்கு விரோதமாகப் பேசக் கூடாது. நான் உன்னை நம்பமாட்டேனென்று அவனிடத்தில் சொல்லக் கூடாது. ஏதாவதொரு சாக்கைச் சொல்லி அவனை அனுப்பிவிட வேண்டும். மிகுந்த இரக்கமுள்ள அரசனானவன் துர் நடக்கையுள்ள ஸ்திரீ, அரசனுடைய சேவகன், மிகுந்த கஷ்டத்தையடைந்தவன், அரச குமாரன், அரசன் சகோதரன், இளம்பிள்ளையைப் பெற்று வைத்துக்கொண்டிருக்கிற விதவை, போர்ச் சேவகன், மிகுந்த நஷ்டத்தை அடைந்தவன், ஆகிய இவர்களிடத்தில் கொடுக்கல் வாங்கல் முதலிய வியாபாரம் வைத்துக்கொள்ளக் கூடாது. ஞானம், உயர்குடிப் பிறப்பு, வேத உணர்ச்சி, மன அடக்கம், சாமர்த்தியம், மிதபாஷணம், சக்திக்குத் தக்கபடி தானம் செய்தல், நன்றியறிவு இந்த எட்டு குணங்களும் ஒருவனுக்கு வரத்தினால் கிடைக்கத்தக்கவை. அரசன் ஒருவன் மேல் தயவாயிருந்தால் அவனுக்கு இவைகளெல்லாம் சேர்கின்றன. பலம், அழகு, நல்ல குரலோசை, அக்ஷரங்களைச் சுத்தமாயுச்சரித்தல், மென்மைத் தன்மை, நல்ல மனம், சுத்தம், நன்றியறிவு, மிருதுவான அவயவங்கள், அழகான ஸ்திரீ இந்தப்பத்தும் யாகம் செய்த ஒருவனுக்குக் கிடைப்பவைகளாம். மிதமான போஜனம் செய்கிறவன், சுகம், தீர்க்காயுசு, சௌக்கியம், சந்ததி சுகம், இகழ்ச்சியில்லாமை, பெருந்தீனியின்மை, இவைகளையும் அடைவான். துர்ச்செய்கை யுள்ளவன், அதிகமாயுண்பவன், எல்லாராலும் பகைக்கப்பட்டவன், மகாவஞ்சக முள்ளவன், கொடியவன், காலம் இடம் பொருள் இவைகளை அறியாதவன், விகாரமான உடை உடுப்பவன், இவர்களுக்கு வீட்டில் இடம் தரக்கூடாது. உலோபி, பிறர்குற்றங்களை எடுத்துச் சொல்கிறவன், வேதத்தை அறியாதவன், வனத்தில் வசிக்கிறவன், வஞ்சகன், மதிக்கத்தக்கவர்களை மதியாதவன், துஷ்டன், வழக்கமாய்ப் பிறருடன் சண்டையிடுகிறவன், நன்றியறி வில்லாதவன்,

இவர்கள் கெஞ்சிக்கேட்ட போதிலும் அவர்களுக்குத் தானம் கொடுக்கக் கூடாது. பகைவன், எப்போதும் பிழை செய்கிறவன், பொய்யாக விவாகம் செய்து கொண்டவன், தெய்வபக்தியில்லாதவன், அன்பில்லாதவன், எல் லாக் காரியங்களையும் செய்யவல்லவ னென்று தன்னைத்தானே மெச்சிக் கொள்கிறவன், இவர்களிடத்தில் ஒருபோதும் சேவகம் செய்யக்கூடாது. காரியங்களெல்லாம் சரியான காரணத்தையே அனுசரிக்கின்றன. எல்லாக் காரணங்களும் காரியங்களின் சுபாவத்தை அனுசரிக்கின்றன. காரண காரி யங்களிரண்டும் ஒன்றை யொன்று அனுசரிக்கின்றன. காரியசித்தியோ இரண்டையும் அனுசரிக்கின்றது. புத்திரர்களை அடைந்து அவர்களுக்குச் சரியான ஜீவனுதாரங்களைக் கற்பித்துச் சுயாதீனமாயிருக்கச் செய்து, தக்க கணவனுக்குக் கன்னிகையைக் கொடுத்து, வனத்துக்குச் சென்று முனிவனு யிருத்தல் வேண்டும். கடவுளின் அருளை அடையவேண்டும். எல்லாப் பிராணிகளுக்கும் பிரியத்தைச் செய்யவேண்டும். தன்சுகத்துக்கும் தகுந்த தைச் செய்து கொள்ளவேண்டும். இப்படிச் செய்வதுதான் ஒருவன் தன் எண்ணத்தில் சித்தி பெறுவதற்கு மூலமாயிருக்கின்றது. ஜீவனத்துக்காகக் கவலைப் படுகிறவன், அறிவு, உற்சாகம், சாமார்த்தியம், சக்தி, விடா முயற்சி இவைகளை அனுசரிக்கவேண்டும்.

அரசனே! பாண்டவர்களைப் பிரித்து விட்டதனுல் உண்டான தீமை யைப்பாரும். அது இந்திரனுடன் கூடின சகலதேவர்களுக்கும் துக்கத்தை உண்டாக்குகிறது. முதலாவது பாண்டவர்களுக்கும் பகை, இரண்டாவது ஆயு சுள்ளவரைக்கும் தீராத்துயரம், மூன்ருவது கௌரவர்களுடைய சிறந்த புகழ் இகழப்பட்டது, நாலாவது உமது சத்துருக்கள் எல்லாருக்கும் சந்தோஷம். பீஷ்மர், துரோணர், நீர், இராஜாவாகிய யுதிஷ்டிரர் இந்நால்வருடைய கோபமும் ஒரு பெரிய தூமகேது பூமியின்மேல் குறுக்காய் விழுந்தது போல இந்த உலகம் முழுவதையும் எரித்துவிடப் போகின்றது. உமது புத்திரர் கள், கர்ணன், பாண்டு குமாரர்கள் இவர்கள் எல்லாரும் சேர்ந்தால் சமுத் திரத்தை மேகலையாகத் தரித்த பூமிமுழுதையும் ஆளக்கூடும். அரசனே தார்த்தராஷ்டிரர்கள் ஒரு பெரியகாடு. பாண்டவர்கள் அந்தக்காட்டில் வசிக்கிற புலிகள் என்று நான்கருதுகிறேன்; புலிகளுடன்கூடின காட்டை அழித்துவிடாதேயும்; காட்டிலிருந்து புலிகளைத் துரத்திவிடாதேயும். புலி களில்லாமல் காடுகளில்லை; காட்டையின்றிப் புலிகளுமில்லை; காடு புலிகளுக்கு இருப்பிடம்; புலிகள் காட்டுக்குக் காவல்.

பாபிகளாயிருப்பவர்கள் பிறருடைய குணங்களை ஆராய்ந்து அறிய மாட்டார்கள். குற்றங்களையே ஆராய்வார்கள். உலகவாழ்க்கையில் மேலான நிலைமையை அடையவிரும்புகிறவன் முதலில் தர்மத்தை அனுசரிக்க வேண் டும். ஏனென்ருல், உண்மையான அந்தச் செல்வம் சொர்க்கத்துக்கு வேருன தில்லை. எவனுடைய ஆத்மா பாபத்தை ஒழித்துப் புண்ணியத்தில் நிலைத்து நிற்கிறதோ அவன், எல்லாப் பொருள்களின் இயல்பையும், இடையிலுண்டா கும் நிலைமையையும் அறிவான். எவன் தர்மார்த்த காமங்களைச் சரியான காலத்தில் அனுசரிக்கிருனே அவன் இம்மூன்றின்பயனையும் இவ்வுலகத்திலும் மறு உலகத்திலும் அனுபவிப்பான். எவன் கோபத்தையும் சந்தோஷத்தையும் ஜயித்துவிடுகிருனே அவன் துக்கத்தினுல் புத்தியை இழக்கிறதில்லை; வாழ் வையே அடைகிருன்.

மனிதர்கள் வெவ்வேறான ஐந்துவகைப் பலன்களை உடையவர்களா யிருக்கிறார்களென்று சொல்லப்படுகிறது. இவ்வைந்துக்குள் புஜபலம் இழி வுடையதாகக் கருதப்படுகிறது. நல்ல மந்திரிகளைத்தேடி யடைவது இரண் டாவது பலமாகக்கருதப்படுகிறது. திரவியத்தை அடைவது மூன்றாவது பலமாகக் கற்றோர்கள் சொல்கிறார்கள். பிதா பிதாமகன் இவர்கள் வழி யாலே அடையப்படுகிற பிறப்பு நாலாவதுபலமாம். இவைகளாலே அடையப் படுவதும், எல்லாப் பலன்களையும்விட மேலானதாக மதிக்கப்படுவதுமான பலன் அறிவேயாகும். தன்னை ஒத்தவர்களுக்குத் தீங்குசெய்யக் கூடிய பகையை எழுப்பிவிட்டு, அவர்கள் தூரத்தில் வசிக்கிறார்களென்னும் எண் ணத்தை உறுதியாகக் கொள்ளக்கூடாது. புத்திசாலியாயிருக்கிறவன் அரசன், சர்ப்பம், தன் எஜமான், சத்துரு, சுகானுபவம், தீர்க்காயுசு இவைக ளிடத்தில் நம்பிக்கை வைக்கக்கூடாது. அறிவாகிய அம்பினால் அடிக்கப் பட்டவனுக்கு மருந்துமில்லை, வைத்தியனுமில்லை. இவ்விஷயத்தில் அவன் ஹோமமந்திரங்கள், மங்களமான சடங்குகள், அதர்வணவேத மந்திரங்கள், விஷத்தை மாற்றும் மருந்து இவைகளாலும் பிரயோசனத்தையடைய மாட்டான்.

பாம்பு, சிங்கம், நெருப்பு, இரத்தக்கலப்பான உறவு இவைகளில் ஒன்றை யும் அலக்ஷியம் பண்ணக்கூடாது. ஏனென்றால் இவைகளில் ஒவ்வொன் றும் மஹா பல முள்ளதாயிருக்கின்றது. இவ்வுலகத்தில் நெருப்பு மஹா சக்தியுள்ள பொருள். இது விறகில் கலந்திருக்கிறது. பிறரால் மூட்டி விடப்படாதிருக்கிற வரையில் அது அந்த விறகை எரிக்கிறதில்லை. கடைதல் முதலியவற்றால் அதை வெளிப்படுத்தினால் அது தன்சக்தியால் அந்தக் காட் டையையே யன்றி வேறுபல பொருள்களையும் எரித்துவிடுகிறது. உயர்ந்த வம்சத்தில் பிறந்தவர்கள் அந்த நெருப்பைப்போன்ற சக்தியுடையவர்களா யிருக்கிறார்கள். பொறுமை யுள்ளவர்களா யிருப்பார்கள். கோபக் குறியை வெளிக்குக்காட்ட மாட்டார்கள். காட்டில் மறைந்திருக்கிற நெருப்பைப் போல அடங்கி யிருப்பார்கள். அரசனே! நீரும் உமது புத்திரர்களும் புண்ணியத்தின் கொடியைப்போல இருக்கிறீர்கள். பாண்டவர்கள் சால விருட்சங்களைப்போ லிருக்கிறார்கள். கொடியானது தான் படர்வதற்குரிய மரம் பக்கத்திலிருந்தாலன்றிப் படராது. உமது புத்திரர்கள் ஒரு வனம்; பாண்டவர்கள் அந்த வனத்தில் வசிக்கிற சிங்கங்கள். சிங்கங்கள் இல்லாமற் போனால் வனம் அழகு அழிந்து கெட்டுப்போகும்; வனம் இல்லாவிட்டால் சிங்கங்களும் அழிந்து போகும். கிழவனும் மரியாதை யுள்ளவனுமான ஒருவன் தன் வீட்டுக்கு விருந்தாக வந்தால், அப்போது யௌவன புருஷ னுடைய மனமானது உயரப்பறக்கிறது. அவன் எதிர்கொண்டு போய் விருந்தாளியை வணங்கின பின் அந்த மனதை மீண்டும் அடைகிறான். மன அடக்கமுள்ள அந்தப்பாலியன் விருந்தாளிக்கு ஆசனமிட்டு அர்க்கிய பாத்தி யங்கள் கொடுத்து கிரமப்படி யோக க்ஷேமங்களை விசாரிக்கிறான். அதன் பின் தன் விஷயங்களைப் பேசுகிறான். எல்லாவற்றையும் யோசித் துப் பின் அதிதிக்குப் போஜனமிடுகிறான். அந்தணன் எந்த வீட்டில் மந் திரத்துடன் தண்ணீர், தேன் முதலியவற்றைப் பெறுகிறதில்லையோ அந்த வீட்டில் வசிக்கிறவன் பயன் அடைகிறதில்லை. வைத்தியன், அம்பு பண்ணு கிறவன், பிரமசரிய விரதத்தை அனுசரிக்க முடியாமல் விட்டவன் ஆகிய இவர்களும் விருந்தினர்களானால் உபசரிக்க வேண்டும். (தொடரும்)

# தாஜ்மஹால் கட்டியது யார்?

(K அல்லா பிச்சை.)

கி. பி. 1612-ல் ஜஹாங்கீர் அரசர் "அர்ஜ்மந்த் பானுபேகம்" (இப்பெயரே பின் மும்தாஜ் என்று விளங்கியது) என்ற பெண்ணை தம் குமாரர் ஷாஜகான் என்பவருக்கு மணம் செய்துவைத்தார். அப்பொழுது மணமகனுக்கு வயது 20, மணமகள் வயது 19. இவள் 19-வருஷம் மணவாழ்க்கை நடத்தியதில் 14 குழந்தைகளைப் பெற்றெடுத்தாள்; இறுதிப் பிரசவத்தில் 30 மணிநேரம் வேதனையால் அவதிப்பட்டு 7-6-1634-ல் இவ்வுலகவாழ்வைத் துறந்தாள்.

ஷாஜகான் சக்ரவர்த்தி அப்போது அடைந்த வருத்தம் சொல்லுந்தரமன்று. அன்றுமுதல் அவர் அழகிய உடை, வாசனை, ஆபரணங்கள் முதலியவற்றை அணிவதை வெறுத்து விட்டார்; அந்தப்புரத்திற்குச் சென்றால் மறுநிமிஷமே அழுது கொண்டு திரும்பி விடுவார்.

ஷாஜகான் அரசர் மும்தாஜை மணந்து கொள்வதற்கு 2 வருஷங்களுக்கு முன் ஒரு பெண்ணையும், 5 வருஷங்களுக்குப் பின் ஒரு பெண்ணையும் மணம் செய்து கொண்டார். ஆனால் அவ்விருமணங்களும் ராஜீய விஷயங்கள் சார்பாகச் செய்யப்பட்டனவே யன்றி காதல் மணங்களல்ல. மும்தாஜ்மீதே அவருடைய முழுக்காதலு மிருந்ததால் வேறொருவரிடம் பிரியங்கொள்ள இடமில்லாமற் போய்விட்டது. எக்காலத்தும் அவர் மும்தாஜைவிட்டுப் பிரிந்தது இல்லை. இத்தகைய அன்பே தாஜ்மஹால் கட்டியதற்குக் காரணம். அதைக் கவனிப்போம்.

மும்தாஜின் கடைசிப்பிரசவத்திற்குச் சற்று முன்பு தன் கர்ப்பப் பையிலிருந்து ஒரு அழுகைக்குரல் கேட்டதாம். அதைக் கேட்ட "பேகம்" உடனே சக்ரவர்த்தியை அழைத்து "கர்ப்பப்பையில் சிசு கத்தினால் அது வெளிவந்த பின் தாய் உயிருடனிருக்க முடியாதென்பது நிச்சயம்" ஆகவே நான் விண்ணுலகம் செல்லவேண்டியவளாகி விட்டேன். அரசே! என் தவறுதல்களை மன்னித்துவிடுங்கள். தாங்கள் சிறையிடப்பட்ட போதும் நான் தங்களுடனிருந்து கஷ்ட, நஷ்டங்களை அனுபவித்திருக்கிறேன். கடவுளருளால் சந்தோஷமாய் ராஜ்யபாரம் நடத்தும் இந்நாளில் நான் தங்களை விட்டுப் பிரிய வேண்டியவளாகி விட்டேன். என் கடைசி இரண்டு வேண்டுகோளின்படி நடப்பதாகப் பிரமாணஞ் செய்யுங்கள்" என்று கேட்டாள். சக்கரவர்த்தி அங்ஙனமே செய்து வினவ, மும்தாஜ் கூறியதாவது,

தெய்வ கிருபையால் தங்களுக்கு நான்கு குமாரர்களும் நான்கு குமாரிகளு மிருக்கிறார்கள். தங்கள் கீர்த்திக்கும், சந்ததி பெருகுவதற்கும் அக்குழந்தைகளே போதும். வேறு ஸ்திரீகளின் சம்பந்தத்தால் இன்னும் குழந்தைகளை உண்டாக்கிக்கொண்டு அவர்களும் என்மக்களும் ராஜ்யத்திற்காக யுத்தம் செய்யும்படி விட்டுவிடாதீர்கள். இரண்டாவது என்னைப்

புதைக்கும் இடத்தில் உலகத்திலேயே இணையற்றதென்று சொல்லக்கூடிய "கோரி" ஒன்று கட்டவேண்டும், என்பதே.

பிறகு அவ்வரசியார் "தஹூராரா" என்ற பெண்ணைப் பெற்ற மறு நிமிஷத்தில் உயிர்துறந்தார் என்ற கதை "குதாபக்ஷ்" வாசகசாலையாரால் ஆக்ராவிலுள்ள விக்டோரியா ஞாபகச் சின்ன சபைக்குக் கொடுக்கப்பட்ட பாரசீகக் கை யெழுத்துப் பிரதியில் காணப்படுகிறதாம்.

மும்தாஜ் சரீரம் முதலில் புர்ஹான் பூருக்கு எதிரில் தபதி நதிக்கரையிலிருந்த ஒரு தோட்டத்தின் நடுவேயுள்ள ஒரு கட்டிடத்தில் சமாதி செய்யப்பட்டது. பின், அப்பிரேதம் வெளியி லெடுக்கப்பட்டு ஆக்ராவிற்குக் கொண்டு வரப்பட்டு யமுனை நதிக்கருகில் அடக்கம் செய்யப்பட்டது. அங்கு கட்ட வேண்டிய கோரிக்கு அந்நாட்டிலிருந்த சிற்ப சாஸ்திரிகள் ஒவ்வொருவரும் மாதிரிகள் அனுப்பிவைத்தார்கள். சக்கரவர்த்தி அவற்றுள் ஓர் அழகிய மாதிரியைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு கி. பி. 1632-ல் வேலை ஆரம்பித்து 1643-ல் கட்டி முடித்தார். "திவானி அப்ரிதி" என்னும் கிரந்தத்தில் தாஜ்மஹாலின் மதிப்பானது 9 கோடியே 17-லக்ஷம் ரூபாயென்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. தாஜ்மஹாலில் "பதுஞ்சர்" "கத்து" "அஜுபர்" "மரியமா" "பாதில்" என்ற பெயர்களுள்ள 20 வகை விலையுயர்ந்த கற்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. இன்று போய் பார்த்தாலும், தாஜ் மஹால் நேற்றுத்தான் கட்டி முடிந்தது போல் காணப்படுகிறதாம்.

இவ்வளவு அழகு வாய்ந்த கட்டிடம் ஒன்றைக் கட்டும்படி வேண்டிக் கொண்ட மும்தாஜ் அரசியின் பெயரும், காதலியிடம் கொடுத்த வாக்குறுதி தவறாது தாஜ்மஹால் கட்டிவைத்த "ஷாஜகான்" சக்கரவர்த்தியின் பெயரும் உலகமுள்ள வரையிலும் மறையாவென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

### அப்படிச் சொல்லுடா ராஜா!

குழந்தை கொஞ்சிக்கொஞ்சி 'அம்மா முண்டை! அக்காள் குரங்கு! அப்பா நாய்' என்றும், இன்னும் எவ்வளவோ ஆபாசமான கெட்ட வார்த்தைகளையும் பேசுவதைப் பெற்றோரும், உறவினரும் கேட்டு 'அப்படிச் சொல்லுடா ராஜா' என்று தட்டிக்கொடுத்து உற்சாகப்படுத்திக் கொண்டாடுகிறார்கள். தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டிலல்லவா? குழந்தையை இளம்பிராயத்திலிருந்தே நல்ல வார்த்தைகளைப் பேசும்படி பழக்கினால் அதன் பிற்கால வாழ்வு எவ்வளவு பயனுடையதாயிருக்கும்? இந்தக் கேவல தோஷ ஜன்மத்திற்கு குழந்தைகள் கெட்ட வார்த்தை சொல்லக்கேட்பதிலும் ஒரு சந்தோஷமா?

## சிக்கன வாழ்வு.

(A. சுருளியாண்டி கௌட)

"ஆன முதலில் அதிகம் செலவானால்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு."

தனவந்தனாயினும் ஏழையாயினும் தத்தம் வருவாய்க்குத் தக்க அளவு செலவு செய்து வாழ்தல் வேண்டும். அவ்வாறின்றி வரவுக்குமேல் செலவு செய்யும் மனிதன் மட்டிலா மனக்கவலைக்கு ஆளாவன். மேலும் வரவின்றிச் செலவுசெய்பவன் கடனாளியாதல் உறுதி. (கடன்) தந்தவன் கேட்குந் தருண மெல்லாம் கடன் பட்டவன் சற்றுந் தயங்காது—வாய் கூசாது சாக்குப் போக்குச் சொல்ல நேரிடும். ஆதலின், கடன் பொய்ம்மையையும் தன்னுடன் துணை கொண்டு வரும். நிற்க, ஒரு முறை கடன் வாங்கிவிடின் மேன் மேலும் கடன்வாங்கி மீளாத் துன்பத்திற்குள்ளாகும் மிகக் கெட்ட வழக்கம் அம்மனிதனை விட்டு விரைவில் நீங்குவதில்லை.

கடன் வாங்குவோன் தரித்திரனாவது திண்ணம். தரித்திரமோ நல்லொழுக்கத்தை அறவே ஒழித்துத் தீயொழுக்கங்களில் செல்லச் செய்யுந் திறமை வாய்ந்தது; சரீர மனோபலங்களைச் சம்ஹாரம் செய்யக்கூடியது; சுயாதீனத்தைப் போக்கிப் பராதீனப் படுத்தும் வன்மை வாய்ந்தது. மேற்கூறியவற்றால் மிடி என்பது மனிதர்க்கு மிகக்கொடிய சத்துரு வென்பதும், அம் மிடிக்குக்காரணம் 'கடன் படுதலே' என்பதும் நன்கு விளங்கவில்லையா?

'வளவனாயினும் அளவறிந் தளித்துண்' எனும் ஔவையின் அமுத மொழிக் கிணங்க, பெரும் செல்வவந்தராயினும் தம் வருவாய்க்குத் தக்க செலவு செய்து வாழ்தல் வேண்டும். சிக்கனமாய்ச் செலவு செய்து, தாம் தேடும் பொருளில் சிறிது பாகத்தையேனும் சேமித்து வைத்து வருதல் சிறந்த முறையாகும். 11P

'கடன் பட்டார் நெஞ்சம் போலும் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்பது அனுபவ வாக்கன்றோ? மேற்சொன்ன கவியினின்றும் கடன் பட்டவரின் மனம் என்னபாடு படுமென்பது விளங்கவில்லையா?

கடன் படாது காலங்கழிக்க விரும்புவோர் செட்டான செலவில் மட்டிலா மகிழ்வுடன் வாழ்க்கையை நடாத்தப் பழகிக்கொள்ளல் வேண்டும். மட்டான செலவு மன அமைதியை உண்டாக்கும்; தான தருமஞ்செய்ய வல்லமை தரும்.

உழைப்புக்குத் தக்க ஊதியம்.
பட்டவர்க்குண்டு பலன்.
வருந்தாதார்க்கு வருமான மில்லை.
அதிர்ஷ்டத்திற்குத் தாய் உழைப்பு.

எனும் ஆன்றோரின் அநுபவமொழிகளைக் கைக்கொண்டு முயற்சி சிறிதுங் குன்றாது வருந்தி யுழைத்துப் பொருளீட்டல் மாந்தர் கடன். ஆயின், தேடும் பொருள் அனைத்தையும் செலவுசெய்து விடக்கூடாது.

கொஞ்சங் கொஞ்சமாய்ப் பொருளைச் சேமித்து வை.
பலதுளி பெரு வெள்ளம் என்பதை மறந்து விடாதே.
இளமையில் சேர்த்துவைத்த பொருள் முதுமையில் உதவி புரியும்.
சேர்க்கும் பொருளைச் சேமநிதிகளில் போட்டுவைத்தல் நன்று.

# அறிவின் தன்மை

A. S.

அறிவு இரு வகைப்படும். ஒன்று இயற்கை யறிவு; மற்றொன்று செயற்கை யறிவு. இவற்றுள் இயற்கை யறிவினுள்ளும் இரு பிரிவுகளுண்டு. அவை ஐயறிவு பகுத்தறிவு என இருவகைப்படும். இவ் விரண்டினுள் ஐயறிவென்ப ஐம்பொறிகளின் வழியாக மனிதரும் விலங்காதிகளும் சமமாகப் பெற்றுள்ளது. பகுத்தறி வென்பது ஐம் பொறிகளின் வழியாகவன்றி மன வுணர்ச்சியா லறியப் பெறுவது. இப் பகுத்தறிவினுள்ளும் சாதாரணப் பகுத்தறி வென்றும், விசேடப் பகுத்தறி வென்றும் இரு பிரிவுகளுண்டு. உதாரணமாக, நெருப்புச் சுடும், வெள்ளம் இழுத்துச் செல்லும், நாகம் விஷமுடையது என்பன போன்றவை சாதாரணப் பகுத்தறிவாகும். இச் சாதாரணப் பகுத்தறிவானது மனிதர்க்கும் விலங்குகட்கும் பொதுவாக இயற்கையிலேயே அமைந்துள்ளது. விசேடப் பகுத்தறி வென்பது செய்யத்தக்க தின்னது, செய்யத்தகாத தின்னது, இன்னது செய்தால் இன்னது விளையும் என்பன வாதியாகப் பொது வகையில் நுட்பமாக உணரும் மன வுணர்ச்சியே யாகும். இவ் வுணர்ச்சி விலங்கினங்கட்கின்றி மக்கட்கே விசேடமாக அமைந்துள்ளது. இனி நூலறி வென்பது புண்ணிய பாவங்கள், மோக்ஷ நரகங்கள் இவற்றினிலைகளை யறிதலும், அவ் வறிவை இடனறிந்து செலுத்தலும், இதனை, இவ் வமயம், இன்னவாறு, இதனைச் செய்தல் வேண்டும், இச் செயலின் அளவிது, இச் செயலால் விளையும் பயனிது, செய்யாத விடத்து நேரும் தீங்கிது என்பனவாதி நுட்பங்களையும், நமது முன்னோர் கூறி வைத்தருளிய விதிகளையும் நூல் வழியாகத் தெரிந்து கொள்ளலும் பிறவுமாம். தவிர, குரு உபதேசத்தாலும் இடைவிடாத பயிற்சியாலும் நிலைமை, நிலையாமை என்பவற்றையுணர்ந்து உலகைத் துறந்து வீட்டை விரும்பி விரதம், தவம் முதலியவற்றைப்பற்றி நிற்கச் செய்வதே தத்துவ அறிவெனப்படும். மேற்கூறிய இரண்டினுள் இயற்கை யறிவின்பாற்பட்ட பகுத்தறிவும், செயற்கை யறிவின்பாற்பட்ட நூலறிவும் ஒன்றோடொன்று சேர்ந்தே பெரும் பயன் விளைக்கும். பகுத்தறிவு ஒரு முளை போலும், நூலறிவு மழை போலும், பகுத்தறிவு கண்ணொளி போலும், நூலறிவு கதிரொளி போலும், பகுத்தறிவு ஒரு புரவி போலும், நூலறிவு அதனை நடத்தும் பாகன் போலும். ஆகவே, பகுத்தறி வில்லார் எத்தனை நூல்களைக் கற்கினும் பயிரில்லாவிடத்து மழையும், கண்ணில்லார் முன்பு இரவியும், புரவியில்லா விடத்துப் பாகனும் போன்று பயன்படுமாறில்லை. அங்ஙனமே, நூலறிவில்லாத போது பகுத்தறிவானது, மழை முகங் காணாப் பயிரும், மதியொளி காணா விழியும், பாகனில்லாப் பரியும் போன்று பயன்படுமாறில்லை. சிலர் பல நூல்களைக் குருட்டுப் பாடஞ் செய்து உருப்போட்டிருந்தும் அந்நூல்களா லடையும் பயனை அவரும் பிறரும் ஒரு சிறிதும் அடையாமையும், பின்னுஞ் சிலர் போதிய மதியுற்றிருந்தும் நூலறிவின்மையால் அவர் அறிவு நேர்வழியிற் செல்லாது போதல் பற்றி அவர்க்கும் பிறர்க்கும் பயன் படாமற் போவதையும் நாம் நேரிற் காண்கிறோமன்றோ? ஆதலின் இவ் விருவகை அறிவும் ஒருங்கே சேரப் பெற்றாரே அறிவுடையாராவர். அவரெய்தாப் பொருள் எதுவுமில்லை. அவரையே எவரும் மதித்துப் பின்பற்றுவர்.

"அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்."

# அசோக மன்னரின் ஆட்சி.

(ஒரு ஆசிரியன்.)

கி. மு. 272 முதல் 312 வரை சுமார் 40 வருடகாலம் இந்தியாவின் தென்பகுதி நீங்க, மிஞ்சிய நிலப்பரப்பு முழுவதும் அசோக மன்னரின் ஆட்சியின் கீழ் இருந்து வந்தது. தம் ஆட்சியில் ராஜ்ய முழுதும் பக்தி, இரக்கம், சாந்தம், சமரசம் முதலிய உணர்ச்சிகள் நிறைந்து விளங்குமாறு இம் மாண்புற்ற மன்னர் ஆட்சி செய்தார். மிகச் சிறந்த மன்னராகிய அசோகர் ஆண்டு வந்த மௌரிய இராஜ்ஜியமானது முதலில் அவரது பாட்டனாரான சந்திர குப்தரால் நிறுவப்பெற்றது. சந்திரகுப்தர் திண்ணிய உள்ளமும், கொண்ட கொள்கையினின்றும் திறம்பாத இயல்பும் உடையவர்; தற்போது பீஹார் என்றழைக்கப்பெறும் தமது மகத இராஜ்ஜியத்தைப் பெருக்கி, ஆப்கானிஸ்தானம் உட்பட வட இந்தியா முழுவதையும் தம் குடைக்கீழ் கொண்டுவந்தவர் இம்மன்னரே.

அலெக்ஸாண்டர் என்னும் அரசரின் சேனா நாயகர்களுள் ஒருவரும், அவருடைய இராஜ்ஜியத்தின் ஓர் பகுதிக்கு அரசராகவும் விளங்கிய சிரியா தேசத்து மன்னராகிய செலூக்கஸ் என்பவர், தமது மாபெருந் தலைவராகிய அலெக்ஸாண்டர் அரசர் செய்தவண்ணம் தாமும் நாடுகளைக் கைப்பற்றி வெற்றிபெற நினைந்து, சிந்து நதியைக் கடந்து பாஞ்சாலத்தின் மீது படையெடுத்து வந்தார். அவரது போர்த்திறன் சந்திர குப்தரிடம் சற்றும் பலிக்காது போகவே, பாஞ்சால நாட்டை மீண்டும் தாம் கைப்பற்றக் கூடும் என எண்ணிய எண்ணத்தை அடியோடொழித்து, தமது மாற்றானாகிய இந்து அரசனோடு நட்புரிமை கொண்டாரெனில் நம் சந்திர குப்த மன்னரின் பெருமையைச் சாற்றவும் வேண்டுமோ? இச்சந்திரகுப்த மன்னனை ஆங்கில சரித்திரத்தில் படிக்கப் பெறும் வெற்றி வேந்தனான வில்லியம் என்னும் வீரனுக்கு ஒப்பிடலாம். வில்லியம் அரசனைப்போன்றே சந்திர குப்தரும் குடிகளை அன்பினாலும், அருளாலும் ஒன்று படுத்தி ஆளாது, வன்பினாலும், துன்பினாலுமே குடிகளை ஒன்று படுத்தினார்.

சந்திர குப்தருக்குப் பின் அவரது குமாரர் பிந்துசாரர் அரசரானார். இப்பிந்து சாரரைப்பற்றி எதுவும் தெரிந்து கொள்வதற்குப் போதிய ஆதாரங்கள் கிடையா. எனினும் பிந்துசாரரது புதல்வர்தான் மௌரிய வம்சத்தைச் சிறப்பாகக் கொண்டாடுவதற்குக் காரண பூதராய்த் தோன்றிய அசோக மன்னர். அசோகர் செய்த அரும்பெருஞ் செயல்கள் அனந்தம். உலக முழுவதும் பௌத்த மதத்தைப் பரவச்செய்து, மற்றெவரும் செய்ததைக் காட்டிலும், அம்மதத்தைப் புவியின் பெரும் சமயங்களிலொன்றாக்கப் பெருமுயற்சி செய்தவர் இவரே. இது மட்டுமோ? தம் ஆட்சி முறையில் தர்மமே தழைக்குமாறு செங்கோல் செலுத்தி வந்தார்; தன்னயம் விடுத்துப் பிறர்க்கென்றே வாழ்ந்து வந்தார். அசோகர் பௌத்த மதக் கொள்கையைப் பின்பற்றிய பின்னர் அவரது வாழ்க்கையில் சாந்தமும், அமைதியும் குடிகொண்டு விளங்கின. செய்வதற் கரிய செயல்களையே அவரது ஜீவியத்தில் காணமுடியும். தமது குடிகளின் வாழ்க்கையை மேம்படுத்தவும், துன்பத்தைத் துடைக்கவும் அவர் செய்த காரியங்கள் பல. பெரும் புகழ் பெற்ற சாலமோன், நெப்போலியன் முதலியவர்களைப்பற்றிக் கூறப்படும் கதைகளைப் போன்றே, அசோகரைப்பற்றிக் கூறப்படும் கதைகளும் அநேகம் உள. ஆனால் அசோகர் வெட்டிய கல்வெட்டுக்களில் தம்முடைய ஜீவியத்

தைப்பற்றித் தாமே கூறும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவைகளி லிருந்தே அசோகரது பெருந்தன்மையான குணங்கள் தெள்ளிதில் புலனு கின்றன.

அசோகர் பட்டத்திற்கு வந்து பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் ஓர் கடும்போர் முயற்சியில் ஈடுபட்டு, அக்காலத்தில் கலிங்கநாடு என்று பெயர் வழங்கிய நாட்டைத் தம் ஆட்சிக் குள்ளாக்கிக் கொண்டார். ஏறக்குறைய இக்காலத்தில் தான் அசோகர் பௌத்த மதத்தை அநுசரிக்கத் தலைப்பட் டார். அவ்வாறு தலைப்பட்டதிலிருந்து, துன்புற்றவர்களிடத்து அவருக்குள்ள பரிவும், போர் புரிவதால் குடிகளுக்கு இடர் பெருகும் தன்மையை ஒழிக்க வேண்டுமென்ற உள்ளப் பண்பும் வலியுறுத்தப்பெற்றன வென்றுரைக்கலாம்.

அசோகர், புத்தர் வகுத்துள்ள புனித மொழிகளையே தம் ஆட்சிக்குரிய அறிவுரைகளாகக் கொண்டு கீழ்நாடுகளில் புத்தமதப் பிரசாரம் செய்வதற் காகப் பல பெரியார்களை அனுப்பினார். அரச குடும்பத்தினரின் உண் டிக்காக அளவற்ற பிராணிகளைக் கொல்லுதல் வழக்கமாயிருந்தது. அசோகரோ அவைகளைக்கூடிய மட்டும் குறைக்கும்படி கட்டளை யிட் டார். பின்னும் சிறிது காலத்திற்குள் இக்கொடுஞ் செயலையும் அறவே நீக்கி விட்டார். வேட்டை யாடுதலை வெறுத்து நீக்கினார். தேசயாத்திரை செய் யத் தலைப்பட்டார். சென்ற இடங்களிலெல்லாம் மதப் பிரசாரவேலையையும் நடத்தினார். மாசற்ற மனத்தினர்களுக்குப் பரிசுகள் வழங்கினார். பெற் றோரைப்பேணல், வாய்மையினின்றும் வழுவாமை முதலியவற்றை வற்புறுத்தி னார். கற்பாறைகளில் அசோகர் வெட்டியுள்ள மானிடரின் ஒழுக்க சம்பந்த மான உரைகள் பல. அவற்றுள் ஒன்று பின் வருமாறு:— 'தாய் தந்தைய ரைப் பேணுவாயாக; உயிர்ப் பிராணிகளிடம் அனபு வை; வாய்மையினின் றும் சிறிதும் வழுவாதே, அசோகரின் அமுதமொழிகளாவன.

1. எவரும் தம்முடைய மதத்தைபற்றி அளவுக்கு மேல் புகழ்தலோ, பிறர் மதத்தைப் பற்றி இகழ்தலோ கூடாது. ஒவ்வொரு மதமும் ஏதேனும் ஒரு காரணம் பற்றியாவது போற்றத்தக்கதே; எவனொருவன் பிறர் கொள்கை களையும், கோட்பாடுகளையும் தூற்றுகிறானோ, அவன் தன்னுடைய கொள்கை களையே தாழ்த்துகிறான்.

2. என்னுடைய முயற்சிகளில் நான் ஒருபோதும் திருப்தியடையவே இல்லை.

அசோக மன்னரின் சொல்லும் செயலும் ஒத்தே இருந்தன. மனிதர் கள் மனங்கொள்ள வேண்டிய அறக்கொள்கைகள் வரையப் பெற்றுள்ள பாறைகளும் தூண்களும் அவரது பரந்த இராஜ்ஜியத்தின் பல பாகங்களிலும் காணப்படுகின்றன. ஆங்கில சரித்திரத்தில் அசோகருக்கு ஒப்பான அரசர் உண்டெனக் கூறுவதற்கிடமில்லை. இருப்பினும் சிற்சில சந்தர்ப்பங்களில் மார்க்கஸ் அரீலியஸ் (Marcus Aurelius) என்னும் சக்கரவர்த்தியையும், வேறு சில விஷயங்களில் ஆங்கில மன்னரான ஆல்பிரட்டையும் (Alfred) உவமை கூறலாம். முடிவாகக் கூறுமிடத்து வெளியிலிருந்து வந்த படை யெழுச்சி, உள் நாட்டுக் கலகம் முதலியவற்றால் துன்புறாமல் சமாதான முற்ற ஒரு காலம் இந்தியாவில் எப்பொழுதாவது இருந்ததுண்டானால், அந்தக் காலம் அசோக மன்னரின் நீண்ட ஆட்சிக்காலமே எனக் கூறலாம்.

# லிகித விலாசம்.

S. V. V.

[கடிதங்களாலேயே விளங்கும் கதை.]

மகிபாலபுரம்,
2-5-21.

எனது அன்புள்ள விஸ்வநாத !

இரண்டு தினங்களுக்கு முன் நாம் செங்கற்பட்டில் சினேகவாஞ்சையால் ஒருவரை யொருவர் பிரிய மனமில்லாமல் மனக்குழப்பத்தோடு பிரிந்த பொழுது, நாமிருவரும் அடிக்கடி கடிதம் எழுதிக் கொள்ளவேண்டு மென்று செய்துகொண்ட பிரதிக்ஞைப்படி இன்று இக்கடிதத்தை எழுதுகிறேன். நாமிருவரும் சென்னையில் ஒரே அறையிலிருந்தபொழுது சிலசமயங்களில் நான் விம்மிதமடைந்து உட்கார்ந்திருந்ததும், நீ யாது காரணமென்று வினவ வினவ நான் மறுமொழி யொன்றும் புகலாதிருந்ததும் இப்பொழுது உனது நினைவிற்கு வரலாம். 'சட்டப் பரீக்ஷை தீர்ந்தது ; இனி அடுத்த ஆண்டுமுதல் சென்னையில் சுகமாகத் தொழிலை யாரம்பிக்கலாம்' என்று மகிழ்ச்சியாய் மனப்பால் குடித்தவண்ணம் ஊருக்குச்சென்ற என்னைப் பாழுந்தெய்வம் படுகுழியிலாழ்த்தி விட்டது ! செங்கற்பட்டு ஸ்டேஷனில் சிற்றுண்டி யருந்திவிட்டு, இரவு போஜனத்திற்கு அங்கிருந்து பதினொரு மைல் தூரத்திலுள்ள மகிபாலபுரத்திற்குச் சென்றுவிடலா மென்ற எண்ணத்துடன் ஓர் குதிரைவண்டி யமர்த்திக்கொண்டு புறப்பட்டேன். தீபாவளிக்குப் பிறகு நான் ஊருக்கே போக வில்லை யென்பது உனக்குத் தெரியுமல்லவா ? அதை எண்ணித்தானே எனது காதலிக்கு மிட்டாய், ரவிக்கை, தலையில் வைத்துச் சடைபோட்டுக் கொள்ளக் கூடிய தினுசுகள், வாசனைச் சாந்து, பரிமளகந்தம் முதலியவற்றைச் சென்னையில் உன்னையும் அழைத்துக்கொண்டு போய் வாங்கினேன் ?

இரவு சுமார் எழுமணியிருக்கும். வண்டியானது மகிபாலபுரத்திற்கருகிலுள்ள காளிகோவிலண்டை சென்றுகொண் டிருந்தது. எனக்கு அறிமுக மில்லாத அவ்வூரார் சிலர்கூடி அங்கு நின்று என்னை உற்றுப் பார்த்த வண்ணம் ஏதோ பேசிக்கொண் டிருந்தார்கள். வண்டி சீக்கிரம் என் வீட்டு வாயிலிற்போய் நின்றது. வண்டியை விட்டுக் குதித்து ஜட்கா வாலாவிடம் சாமான்களை எடுத்துவரும்படி சொல்லிவிட்டு, நான் வேகமாக உள்ளே நுழைந்தேன். நான் யாரை முதலிற் பார்க்கவேண்டு மென்று அவ்வளவு வேகமாய் நுழைந்தேனோ அந்த ஆசாமி என்னெதிர்ப் படவில்லை ! சரி ! ஏதோ என்மீது கொஞ்சம் கோபமாயிருக்கலா மென்றெண்ணித் திரும்பிப் பார்த்தேன். என் தாயார் ஊமைபோல உட்கார்ந்திருந்தாள். 'ஏனம்மா ! பேசவில்லை. அப்பா எங்கே?' என்றேன். அதற்கு அந்த குணவதி 'உன் பொண்டாட்டி திடீரென்று நேற்றிரவு எங்கேயே ஓடிப்போய் விட்டாள். யோக்கியமான குடும்பத்திற்கு அவமானத்தைத் தேடிவைக்க நுழைந்தாளே

இந்த மினுக்கி ! உன் தகப்பனுர் தேடப்போயிருக்கிருர். ஊரே சிரிக்கிறது' என்று கடுகடுத்துச் சொல்லிவிட்டு, ஒரு ஆட்டு ஆட்டி, முகத்தை ஒரு முரட்டுத்திருப்புத் திருப்பிக்கொண்டு சமையலறைக்குட் சென்ருள்.

இச்செய்தி என்காதில் பட்டதும் இடி விழுந்தது. 'ஆறுமாதகாலமாயிற்றே அமுதத்தை வென்ற மொழிகளைக்கேட்டு ! அவளைக் காணலாம் ; பேசலாம் ; கோபித்துக்கொண்டாலும் குணப்படுத்தலாம் ; அடித்தாலும் பட்டுக் கொள்ளலாம்' என்று இன்னு மென்னென்னவோ எண்ணிக் கொண்டு, ஏதேதையோ வாங்கிக்கொண்டு, சமாதானப் பதங்களை அடுக்கிக்கொண்டு போன எனது ஆர்வம் அடியோடு அடங்க நான் தூண்போல நின்று விட்டேன். துயரம் வந்தென்னை ஒருபுறம் அழுத்திற்று. கண்களில் மள மள வென்று கண்ணீர் ஊற்றெடுத்தது. அப்பொழுது என்மனம் பட்டபாட்டை என்னைப்போல, கொஞ்சுங்கிளியைப் பறிகொடுத்தவர்களே யன்றி வேறு யார்தான் உணர முடியும் ? கூடத்திலிருந்த ஓர் விசுபலகையில் சுவரில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்து பெருமூச்சு விட்டுக்கொண் டிருந்தேன்.

சற்றுநேரமான பின் என் தந்தை பாவம் தள்ளாடிக்கொண்டு வந்து சேர்ந்தார். என்னைப் பார்த்தவுடன் 'அப்பா ! எப்பொழுது வந்தாய் ? ஏன் வருந்தேதியைக் குறித்துக் கடிதம் எழுதவில்லை ?' என்று சொல்லிக் கொண்டே என்பக்கலில் உட்கார்ந்து என் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டே 'அப்பா! ராஜாமணி-நேற்றிரவு எழுமணியிருக்கும்-ஆனால் மாலையிலிருந்து நானவளைப் பார்க்க வில்லை. எங்கேயோ போய்விட்டாள். உன் தாயாரைக் கேட்டதில், இரண்டு தினங்களாக அவள் சரியாகவே சாப்பிடவில்லை, அழுதுகொண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டு மிருந்தாள் என்று சொன்னுள். உடனே நான் வெட்டியான்களைக் கூப்பிட்டுச் சுற்றுக் கிராமங்களிற்போய்த் தேடும்படி அனுப்பிவிட்டு, இன்றுகாலையிலெழுந்து செங்கற்பட்டு ஸ்டேஷனுக்குப் போய்த் தேடிவிட்டு, சிதம்பரத்திற்கு ஒரு தந்தி கொடுத்துவிட்டு வருகிறேன். இதென்ன ! பெரும் அபவாதமாக வந்து முடியுமோ என்னவோ தெரியவில்லையே ? வயதான காலத்தில்—நீ தான் தலையெடுத்து விட்டாய்—இனி நமக்குக் குடும்பக் கவலையில்லை. கிருஷ்ணு ராமா வென்று பொழுதைப் போக்கலாமென்று நான் எண்ணிக் கொண்டிருக்கையில் இந்தக் கஷ்டத்தை யெல்லாம் பகவான் கொண்டுவந்து விடுகிருரே!' என்று சொல்லி விசனப்பட்டார்.

விஸ்வநாதா ! இவரைப்போன்ற தகப்பனுர் இனி நான் ஏழேழு ஜென்மம் தவங்கிடந்தாலும் எனக்குக் கிடைப்பாரோ ? என் தாயார் தகப்பனுர் குணங்களை நீ இக்கடிதத்திலிருந்தே அறிந்துகொள்ளலாம். உடனே நான் என் தந்தையைப் பார்த்து 'அப்பா! அவள் பிராணத்தியாகம் செய்து கொண்டிருப்பாளோ ?' என்றேன். அவர் 'மாட்டாள், அவள் நல்லபுத்திசாலி, விவேகி, நல்லகுணவதி, இந்தச் சனியனுக்கு என்னவோ அவளைக்கண்டால்

பிடிக்க வில்லை.' என்றார். 'இவள் உபத்திரவம் பொறுக்க முடியாமலே அவள் வெளியேறி இருப்பாள்' என்று நான் எண்ணிக் கொண்டேன். அப்பொழுது என்தாயார் அங்கே வந்து 'நேற்று அவளோடு அந்தச் சீர்வந்த சித்துக் குடமுங் காணமற் போயிருந்தது. அது இன்று காலையில் பிள்ளையார் கோவிலுக்குப் பின்னாலிருக்கிற கிணற்றுக்கருகேயுள்ள கள்ளிக்குப் பக்கத்தில் இருந்த தென்று வாயில் கூட்டி சுவர்ணம் கொண்டுவந்து கொடுத்தாள்' என்றாள்.

அப்பால், என்தந்தை, 'குழந்தை காலையில் சாப்பிட்டு வந்திருப்பான். எனக்கும் பசியாயிருக்கிறது. முதலில் இலைபோடு, பிறகு பேசிக்கொள்ளலாம்' என்றார். உடனே நாங்கள் சாப்பிட்டோம். இலையில் உட்கார்ந்தவுடன் எனக்கு அழுகை வந்து விட்டது. 'ஐயோ! இந்த அன்னத்தை ராஜாமணி படைத்தால்...' என்று எண்ணினேன். ஏதோ ஒருவகையாக நஞ்செனை உண்டு பிறகு வெகுநேரம் வரையில் நானும் என் தந்தையுமாகப் பேசிக் கொண்டிருந்தோம். அந்தோ! கிழவர், பாவம். அவ்வளவு தூரம் வண்டியும் கிடைக்காமல் திண்டாடிக் கஷ்டப்பட்டு வந்தமையால் அவர் மெய்ம் மறந்து தூங்கிவிட்டார்.

எனக்குக் கொஞ்சங்கூட நித்திரை வரவில்லை. வயிற்றில் என்னென்னவோ சங்கடங்கள். என் அறைக்குப்போனேன். அந்த அறை மட்டும் அது வரையில் என்மனைவியின் சுவாதீனத்தி லிருந்துவந்தது. என்னிடமும் அதற்குச் சாவியுண்டு. எனது சாவியால் பூட்டைத் திறந்துகொண்டு உள்ளே சென்றதும் மேசையின்மேல் அவளுடைய நகைகளில் இரண்டொன்றைத்தவிர மற்றவை எல்லாமிருந்தன. அங்கு ஏதாவது கடித மிருக்குமோவென்று ஆராய்ந்து பார்த்தேன். ஒன்றுமில்லை. அந்த ஆபரணங்களைப் பார்த்ததும் என்வயிறு பற்றி யெரிந்தது. படுக்கையையும் கட்டிலையும் பார்த்ததும் என் வயிறு பகீரென்றது. 'ஆகா! நாம் வரும்தினத்தைக் குறிப்பிட்டுக் கடிதம் வரைந்திருந்தால் இவ்வளவுதூரம் வந்திருக்காது என்றெண்ணினேன். கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்தென்ன பயன்? அன்றிரவை—உல்லாசமான ஏகாந்த இரவாகக்கழிக்கலா மென்று எண்ணியிருந்த தெல்லாம் போய்—அப்படிக்கழிந்தது.

மறுநாள் மேற்செய்ய வேண்டிய வேலைகளைக் குறித்து நானும் என் தந்தையும் ஆலோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் சிதம்பரம்-என்மாமன் வீட்டிலிருந்து 'ராஜாமணி இங்குவரவில்லை. நாங்களும் தேடுகிறோம். உடனே பதில்' என்று தந்திகிடைத்தது. இனி, சென்னைக்குப் போய் அவளைக் கண்டு பிடிக்கவேண்டிய பிரயத்தனங்களைச் செய்ய உத்தேசம். என்மாமன் பெயரும் உன்பெயரே யாதலால் அவர் கொடுத்த தந்தி கிடைத்ததும் உன் ஞாபகம் வந்தது. என் மனைவியைத்தான் நீ பார்த்திருக்கிறாயல்லவா? நீயும் அங்கு தேடுவாயென்று நினைக்கிறேன். பிற பின்னர்,

உன் அன்பிற்குரிய
சாரநாதன்.

விலாசம்
**திருவாளர். விஸ்வநாதன், பி. ஏ.,**
**'ரஞ்சித விலாஸ்'**
நாகை.

# ஹிந்து வான சாஸ்திரம்

அன்புமிக்க ஆனந்தபோதினி பத்திரிகாசிரியர் அவர்களுக்கு

ஐயா,

எனக்கு வான சாஸ்திரத்தில் மிக்க பிரியம் உண்டு; அதைப்பற்றிய புத்தகம் எது அகப்பட்டாலும் அதை உடனே வாசித்துப்பார்த்து அதன் விஷயங்களை கிரகித்துக் கொள்ள முயற்சிப்பது என் வழக்கம். இவ்வாறிருந்து வரும் நாளில், ஹிந்து வான சாஸ்திரத்தைப் பற்றிய பற்பல விஷயங்களையும், ஆங்காங்கு பற்பல புத்தகங்களில் யான் கண்ணுறும்படி நேரிட்டது.

அவைகளில் ஆரிய சித்தாந்தப்படி, பூமியானது துருவசூத்திரம் என்கிற அச்சில் புரளுவதால் தினந்தோறும் இரவு பகல் உண்டாவதாகவும், இன்னும் சில புத்தகங்களில் (உதாரணமாக வராஹமிரர் இயற்றிய பஞ்ச சித்தாந்திகாவில்) ககோளச்சுழற்சியினால்தான் இரவு பகல் உண்டாகின்றனவென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

மற்றபடி எல்லா இந்து வான சாஸ்திரங்களிலும் கிரகங்களெல்லாம் பூமியைச் சுற்றிவருவதாகவே சொல்லப்பட் டிருக்கின்றன.

அதற்கு வேண்டிய கணக்கு முதலியவைகளையும் அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னரே நம் முன்னோர்கள் அறிந்திருந்தார்களாதலால், அதற்குரிய கணித சாஸ்திரங்களையும் அவர்கள் அக்காலத்திலேயே ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இவைகளை யெல்லாம் ஊன்றி நோக்குங்கால், ஒருவிதத் துணைக்கருவியின் உதவியுமின்றி நம்முன்னோர்கள் இத்துணைக் கணக்குகளையும் எவ்வாறு தான் கணக்கிட்டனரோ என்ற ஐயமும், தற்காலத்தில் மேனாட்டார் தற்போது தான் கண்டுபிடித்ததாகக்கூறும் வானசாஸ்திர விஷயங்களில் அநேக விஷயங்கள் அவர்களுக்குத் தெரியாம லிருந்திருக்கவில்லை யென்பதும் நன்கு புலப்படுகின்றன.

தவிர கிரகசாரம், கிரகஸ்புடம் முதலியவற்றிற் கென்று அவர்களால் ஏற்படுத்தப்பட்டுள்ள கணக்குகளை உற்றுநோக்குங்கால், சந்திரன் ஒன்று தவிர புதன், சுக்கிரன், பூமி முதலிய கிரகங்களெல்லாம் சூரியனைச் சுற்றிவருவதாக ஏற்படுகின்றதே யொழிய பூமியைச் சுற்றிவருவதாக ஏற்படக்காணோம். அவ்வாறிருக்க சூரியன் முதலிய கிரகங்களெல்லாம் பூமியைச் சுற்றி வருவதாக ஏன் சொல்லப்பட்டிருக்கிறது என்று யான் நினைத்து, அதற்கு மாறாகவுள்ள சூரியனை ஸ்திரமாக வைத்து அதன் ஆகர்ஷணவசத்தால் மற்றைய கிரகங்களெல்லாம் அதைச்சுற்றி வருகின்றன என்ற விஷயத்தை அவர்கள் பழைய கிரந்தங்களில் எங்காவது சொல்லாமலிரார்கள் என்றும், நம் கண்ணுக்கு சூரியன் பூமியை வருடமொருமுறை சுற்றிவருதாகத் தோற்றுகிற தோற்றத்தையே அவ்வாறு கூறியிருக்கலாம் என்றும், ஆகையால் இப்போது தான் கண்டு பிடிக்கப்பட்டதாகக் கருதப்படும் விஷயங்களெல்லாம் அவர்கள் அக்காலத்திலேயே நன்கறிந்திருக்க வேண்டும் எனவும் யான்கருதி, அதைப் பற்றி பற்பல பெரியோர்களிடம் கேட்டும், புத்தகங்களில் பார்த்தும் இன்றளவும் அதன் விஷயம் ஒன்றும் புலப்படாமலேயே இருந்தது.

இப்படியிருக்க இன்றையதினம் தற்செயலாய் தங்கள் பழைய ஆனந்தபோதினி சஞ்சிகைகளில் ஒன்றாகிய தொகுதி 6-பகுதி 4 க்குச் சரியான சென்ற இரௌத்திரி வருஷத்திய ஐப்பசிமீ சஞ்சிகையில் பிரம்மஸ்ரீ சிவா

னந்த சாகர யோகீஸ்வரர் அவர்களால் எழுதப்பெற்றுள்ள "இல்லறம்-கிரகண காலபலன்" என்ற மகுடம் பூண்ட வியாசமொன்றை யான்கண்ணுறும்படி நேரிட்டது.

அச் சஞ்சிகையில் 142 வது பக்கத்தில் 2-வது பாராவின் ஆரம்பத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயம் பின்வருமாறு.

"இது நூதன வான சாஸ்திரிகளின் கொள்கையென்று சிலர் கருதக் கூடும். அங்ஙனமன்று; சில தேசத்து வானசாஸ்திரிகள் சூரியன் தந்நிலையில் தானே சுற்றிக்கொண்டே நிற்கிறதென்றும் மற்றைய கிரகங்களெல்லாம் அதைச்சுற்றி ஓடுகின்றன என்றும் கூறுவார்கள். சிலர் பூமி நிலையாக நிற்கச் சூரிய சந்திராதிகள் அதைச்சுற்றி ஓடுகின்றனவென்றும் கூறுவார்கள். நமது தேசத்தில் இவ்விருவகைக் கொள்கைகளும் உண்டு. முக்கியமாகச் சூரியன் தன்னிலையிற் பிரியாது சுழன்றுகொண்டே நிற்கின்றதென்றும், மற்றைய கிரகங்கள் அதன் வேகத்தால் சுழற்றப்பட்டு அதைச்சூழ்ந்து செல்கின்றன வென்பதுமே கொள்ளப்படும். இது வேத சம்மதமாம்."

இதனைக் கண்ணுற்ற எந்தனுக் குண்டான மட்டற்ற மகிழ்ச்சியை யார்தான் அளவிட்டுக் கூறவியலும். மேற்படி வாக்கியங்களினின்றும் தற்போது மேனாட்டார் கூறும் விஷயங்களனைத்தும் அநாதியான நம் வேதத்திலேயே கூறப்பட்டிருக்கிறதென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகின்ற தன்றோ.

ஆனால் இவ்விஷயங்களை யெல்லாம் நன்குணராமல் நம் நாட்டார் பலர் பிடிவாதத்தையே மேற்கொண்டு பூமி ஸ்திரமாக ஆசையாமலிருக்கிறதென்றும் இரவு பகல்கூடக் கோளச் சுழற்சியினால்தா னுற்பவிக்கின்றனவென்றும் வருஷத்திற் கொருமுறை சூரியனே பூமியைச் சுற்றிவருகிறதென்றும், பூமி சூரியனைச் சுற்றுவதாகச் சொல்வது எந்த சாஸ்திரத்திலும் சொல்லவில்லை யாகையால் அது மேனாட்டார் சொல்லும் புதுமையான கற்பனையென்றும் சொல்லித் திரிகின்றார்கள்.

இஃதிங்ஙனமாக மேற்படி வியாசத்தை வெளியிட்ட பிரம்மஸ்ரீ சிவானந்த சாகர யோகீஸ்வரர் அவர்கள் தயவு கூர்ந்து சிரமத்தைப் பாராட்டாமல் மேற்படி விஷயம் வேதசம்மதம் என்பதற் காதாரமாகவுள்ள அவ்விஷயம் எந்தவேதத்தில் எவ்விடத்தில் கூறப்பட்டிருக்கிறதென்பதையும் இன்னும் இந்து வான சாஸ்திரத்தைப் பற்றிய பெருமைகளையும் விவரமாக வெளியிடுவாரேல் என்போன்ற அநேகர் அவருக்கு மிக்க நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருப்பதுமன்றி மேற்படி பிடிவாதக்காரர்களின் வாயையடக்க அஃதோர் தகுந்த மருந்துமாகு மெனவும் யான் கருதுகின்றேன்.

ஆகையால் இவ்விஷயத்தைக் குறித்து பிரம்மஸ்ரீ சிவானந்த சாகர யோகீஸ்வரர் அவர்கள் கூடிய சீக்கிரத்தில் தங்கள் ஆனந்தபோதினி பத்திரிகை மூலமாய் ஒருவியாசம் வெளியிடுவாரென் றெண்ணி இவ்வியாசத்தை யான் வரைந்துள்ளேன்.

இதில் ஏதேனும் குற்றமிருப்பினும் அதைக்கருதாது நீக்கிக் குணத்தையே கொள்ளுமாறு வேண்டுகின்றேன்.

புத்தா நத்தம்
3-11-1928

இங்ஙனம், தங்கள் உண்மையுள்ள
கோ. ஸ்ரீனிவாஸய்யங்கார்




# சர். பிரோஜ்ஷா மர்வான்ஜீ மேதா.

**(ஸ்ரீ லக்ஷ்மி காந்தன் எழுதியது.)**

## முன்னுரை.

## இளமைப் பருவம்.

அரும் பெருங் கிழவர் தாதாபாய் நௌரோஜிக்கு அடுத்தவராக சர் பிரோஜ்ஷா மர்வான்ஜி மேதாவைக் கூறலாம். இவர் பம்பாயில் 1845-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 4-ம் தேதி பிறந்தவர். தாய்மொழியில் தக்க பாண்டித்ய மும் வணிகத் திறனுமுடைய இவரது தந்தையார் பம்பாயில் காமா கம்பெனி யின் பாத்யஸ்தரான ஓர் வியாபாரி. 1861-ல் மேதா 'மெட்ரிகுலேஷன்' பரீக்ஷையில் தேர்ந்தார். 1864-ல் "எலிபின்ஸ்டன்" கலாசாலையில் பி. ஏ. பரீ க்ஷையிற் றேறி மெத்தப் படிப்பாளியானார்; அடுத்த ஆருவது மாதத்தில் எம். ஏ. பரீக்ஷையிலும் தேறினார். பம்பாய் மாகாணத்தில் தெம்பாய் வெளிப் போந்த தேசாபிமானிக ளனைவரும் இதே "எலிபின்ஸ்டன்" கலாசாலையி லேயே படித்து முன்னுக்கு வந்தவர்க ளென்பதை நாம் இங்கு வாசகர் களுக்கு ஞாபக மூட்டுகிறோம். மேதாவின் மேலான அறிவைக்கண்டு அக் கலாசாலையிலிருந்த மேதாவிகளான வித்வான்க ளெல்லோரும் 'இவர் தாதா வைப்போ லாகிவிடுவார்' என்று ஓதா நின்றனர். அவரிடம் அக் கல்லூரியின் தலைமைப் போதகாசிரியர்—பிரசித்தர் சர் அலக்சாந்தர் கிராண்ட் என் பாருக்கு விசேஷ அபிமானமும் பிரியமும் ஏற்பட்டிருந்தன. கிராண்ட் துரை யவர்கள் தமக்கு மேதாவின்பாலிருந்த உள்ளன்பை வெளியிட அவரைச் சர்வ கலாசாலை அங்கத்தினராக்கி, ஜீஜீபாய் என்ற பாரசீக தனிகருடைய பாண்டித்ய சம்மானத்தை நல்கி சீமைக்குச் சென்று சட்டப் பரீக்ஷையில் தேர்ந்து வரும்படி அனுப்பினார். ஆனால், கண்காணாத்தேசத்திற்குத் தன் கண் மணியை அனுப்ப அவருடைய தந்தை கொஞ்சத்தில் இசையவில்லை.

## சீமை வாசம்.

மேதா இங்கிலாந்துக் கேகி 'லின்கன்ஸ் இன்' னிற் சேர்ந்து, புத்தகமுங் கையுமாக மூன்றாண்டுகள் முயன்று வாசித்து 1868-ம் வருடத்தில் சட்ட சன்னதரானார். இவர் இங்கிலாந்தி லிருக்கும்போதே அப்பொழுது இங்கிலாந் திற்குச் சென்றிருந்த தாதா (தாதாபாய்) அவர்களிடமிருந்து தேசாபிமான தீக்ஷையேற்றுச் சீடரானார். அதுபோழ்து சீமையில் அவரைப்போன்றே சட் டக் கலாசாலையில் மாணவர்களாயிருந்த டப்ளியூ. ஸி. பனர்ஜி, மனமோகன கோஷ் ஆகிய இருவருடைய கூட்டுறவும் மேதாவுக்கு இங்கிலாந்திலேயே

ஏற்பட்டது. தாதாவின்ஆதரவைத் துணைகொண்ட இம்மூவரின் உழைப்பால் லண்டனில் ஓர் இலக்கிய சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. அதுவே பின்னர் 'கிழக்கு இந்தியர் சங்கம்' (East Indian Association) என்று பிரசித்தியடைந்து இன்னும் விளங்குகிறது. இச்சங்கத்தின் சார்பில் மேதா, தாதாவின் அக்கிராசனத்தின்கீழ் "இந்தியரின் போதனுமுறை" என்றொரு அழகிய பிரசங்கமும் செய்தார்.

## இந்தியஜன சேவை.

இந்தியாவுக்குத் திரும்பியது முதல் மேதாவுக்கு அதிக கீர்த்தி யுண்டாயிற்று. 1872-ம் வருடத்திய **மோன கோபுரக் கலக வியாஜ்யத்தில்** (Tower of Silance Riot Case) மேதா எடுத்த பணியை முடித்து விளங்கினர். சூரத் கலவர வழக்கில் இவருடைய வாதிக்கும் வன்மை பிரசித்த மடைந்தது. நியாயவாதத் தொழிலிலேயே நெறிதவறாது இவர் ஏராளமான பொருள் சேர்க்க வியன்றது ஆச்சரியமாகும். பம்பாய் மாகாண சுதேச மன்னர்கள் இவரையே அழைத்துத் தமது வழக்குகளைத் தீர்த்துக்கொள்வார்கள். இவர் இங்கிலாந்திலிருந்து திரும்பியது முதல் பொதுஜன சேவையில் இறங்கி விட்டார், 1869-ம் ஆண்டில் தாதாபாய் நௌரோஜியின் தேச சேவையைப் பாராட்டுதற்கறிகுறியாக அப்பெரியாருக்குப் பணமுடிப்பு அளிக்கப்பட்டபோழ்தே இவர் முதல் முதலாகத் தேசீயத்துறையின் முன்னணியில் நின்றுழைக்க முற்பட்டார். அப்பால், இரண்டோராண்டுகள் கழிந்தபின், நகர பரிபாலனத்திலுள்ள ஊழல்களைப்போக்கி, 1871-ல் சீர்திருத்தப் பிரேரபணைகளைக் கொண்டுவந்து நிறைவேற்றினர். இவருடைய தீர்மானங்கள் நிறைவேறுவதில் பலத்த மறுப்புக்களும் குறுக்கு வாதங்களும் ஏற்பட்டபோதிலும், அவை அனுஷ்டானத்திற்கு வந்தபின் இவருடைய அறிவு நுட்பத்தைச் சிறப்பித்தன. சூரத் தலாசய அவதூறு வழக்கில் மேதாவின் அபார சாதுரிய வாதமும், விகடாலங்கார வித்வத்துவமும் மலைமேலிட்ட விளக்கென விளங்கலாயின. நகர பரிபாலன அங்கத்தினர்களுள் முடிசூடா மன்னரென்ற கியாதியையும் மேதா அடைந்தார். ஆகவே 1884-ல் இவர் பம்பாய் நகர பரிபாலன (Corporation) அக்ராசனாதிபதியாக்கப் பெற்றார். எவ்விதப் பொருட் செலவுமின்றி இவர் மும்முறை விசேஷ வாக்குறுதியுடன் பம்பாய் 'கார்பொரேஷன் பிரசிடெண்ட்' டாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இவர், மூன்றும் முறை நகரபரிபாலன சபையின் தலைவராக அங்கீகரிக்கப்பெற்ற அன்று மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரும் இளவரசியாரும் சீமையிலிருந்து வந்து பம்பாய் துறைமுகத்திலிறங்கி விஜயம் செய்தார்கள்.

## மற்றைய உழைப்புகள்.

மேதாவின் தேசாபிமானம் பிறைபோல நாளும் வரிசை வரிசையாக வளர்ந்து வந்தது. தேசீய விஷயங்களிலும், ராஜீய நன்மைத் துறைகளிலும் மேதா புகுந்து பாடுபட்டுவந்தார். **ஸ்ரீ திலக், புட்நுஷன், தியாப்ஜி** ஆகிய

சிலர்களின் ஆதரவால் பம்பாய் மாகாண சங்க மொன்றை ஸ்தாபித்தார். 1886-ல் பம்பாய் மாகாண கவர்னர் லார்ட் ரியே அவர்கள், மேதாவைச் சட்டசபையில் அங்கத்தவ ராக்கினர். 1885-ல் மேதா காங்கிரஸ் இயக்கத்திற் கலந்து கொண்டார். 1889-ம் ஆண்டைய காங்கிரஸ் மகாசபை இரண்டாம் முறையாகப் பம்பாயிற்கூடிய பொழுது, மேதா வரவேற்புக் கமிட்டியின் தலைவராய் வாசித்த உபசாரப் பத்திரத்தில் அவருடைய தேசீய ஈடுபாட்டின் பெருமை செற்றெறன விளங்கும். 1890-ம் வருடத்தில் கல்கத்தாவில் நடை பெற்ற அகில இந்திய காங்கிரஸ் மகா சபைக்குத் தலைமைவகிக்க மேதா ஏகோபிதமாக அழைக்கப்பெற்றார். அதை அவர் விமரிசையாக, மிதவாதக் கொள்கைகள் மிளிர நடத்திவைத்தார். மறுமுறை 1904-ம் ஆண்டில் காங் கிரஸ் மகாசபை மீண்டும் கல்கத்தாவிற்கு விஜயம்செய்த பொழுதும் இவரே அதன் வரவேற்புக் கமிட்டித் தலைவராக விளங்கினர்.

## சட்டசபை ஊழியம்.

மாகாண சட்டசபைகள் 1892-ம் வருடத்தில் திருத்தி யமைக்கப் பெற்று பொதுஜன வாக்குரிமையில் தேர்ந்தனுப்பும் பிரதிநிதிகளைக் கொண்டு நடைபெறத் தொடங்கிய போது மேதா அவர்கள் ஒரே மன தாகப் பொது ஜனங்களின் வாக்குரிமை பெற்றார். அதுமுதல் ஒவ்வொரு தேர்தலிலும் எவ்விதத் தடையுமின்றி வெற்றியடைந்து அவர் சட்ட சபையின் சாஸ்வத அங்கத்தினரா யிலங்கினர். அஞ்சாமையும், வீரமும், கௌரவமும், மிதவாதமும், சாதுரியமும் அவரிடம் ஒன்று கூடிப் பிரகா சிக்க, அவர் சட்டசபையின் மூலமாகப் பொதுஜனங்களின் தேவைகளனைத்தை யும் கூர்ந்துநோக்கிக் கூட்டுவித்தார். 'கிலவரிச்சட்டத் திருத்த மசோதா' மக்க ளின் பிரதிநிதிகளான சட்டசபை உறுப்பினர்களின் அபிப்பிராயத்திற்கு மா ருக துரைத்தனத்தாரால் நிறைவேற்றப்பட்ட பொழுது "நாம் அச்செய்கைக் குப் பொறுப்பாளிகளில்லை" என்றுவெளியே நடந்தவர்களுள் மேதா முதல்வ ராவார். அன்றுமுதல் அவருள்ளத்தில் சுயமரியாதை ஆவல் ததும்பிநின்றது. 1894-ம் ஆண்டில் அவர் சக்ரவர்த்தி சம்பந்தமான சட்டசபையின் உறுப்பின ராகத் தேர்தலடைந்து தமதுசேவையின் திறமையைத் தேசமகா ஜனங்களின் சீரிய மனதில் சிலாசாஸனம் செய்து விட்டார். சண்டைக்குச் சண்டையும், வாதத்திற்கு வாதமும், சமாதானத்திற்குச் சமாதானமும், தந்திரத்திற்குத் தந்திரமும், வீம்புக்கு வீம்புமாக அரசாங்கத்தாருடன் தேசநலத்தைக் கரு திய அளவில் எதிர்த்து நின்று எதற்கும் அஞ்சாது பம்பாய் வங்காள மாகாண வாசிகளின் ஆசிக்கும் போற்றுதலுக்கும் பாத்திரரானர். அவ்விரு மாகாண வாசிகள் மேதாவின் பொதுநல ஊழியத்தை மெச்சி, விசேஷ மகாசபை யொன்று கூட்டி அவருக்குப் பாராட்டுதல் உபசாரப் பத்திர மொன் றை யளித்தனர். இங்ஙனம் முப்ப தாண்டுகள் உழைத்தபின் தம்மை

விட பால்யர்களான தேசாபிமானிகள் முன்வந்தமையால் மேதா அச்சபைகளினின்றும் விலகிக்கொண்டார்.

## கல்வி முன்னேற்றம்.

அந்நாட்களில் ஸ்ரீமான் மாதவ கோவிந்த ரானடே அவர்கள் கட்டாயப் படிப்பும், சுதேசபாஷைப் பயிற்சியும் மக்களுக்கு அத்யாவஸ்ய மென்று அகோராத்ரம் பாடுபட்டுப் பெரிய கர்மயோகியாய் உழைத்துவந்தார். மேதாவும், அவரோடு சேர்ந்து வித்யாசேவை செய்து வருவாராயினர். பம்பாய் சர்வ கலாசாலை பரிபாலன சங்கத்தின் அங்கத்தினராகவும், பம்பாய் வித்யாபிவிருத்தி ஆலோசனைச்சபையின் உறுப்பினராகவுமிருந்து அவரியற்றிய அரும் பெருஞ் செயல்கள் பல. தவிர, பம்பாய் மாகாண இலக்கிய சங்கம், கலா குமாரப் பட்டதாரிகள் சபை, முதலியவற்றின் கூட்டங்களுக்கு மேதா பன்முறை தலைமை வகித்தும், பொருளுதவி புரிந்தும் ஊக்கம் அளித்து வந்தார். 1892-ல் புனாவில் நிகழ்ந்த மாகாண தேசநலசபைக்கு மேதா தலைவராயிலங்கினார். பம்பாய் மில் சங்கத்தாரின் சார்பில் மேதாவியற்றிய ஊழியமும் புகழ்தற் குரியது.

## பின்னுரை.

மேதாவின் தேச சேவையைப் பற்றிய மக்களின் புகழ்ச்சியை இங்கு நாம் எடுத்தெழுதத் தேவையில்லை. அரசாங்கத்தார் அவருக்கு 1894-ல் ஸி. ஐ. இ, பட்டமும், 1904-ல் கெ. ஸி. இ. சன்னதமும் வழங்கிப் பாராட்டினர். விக்டோரியா மகாராணியார் பம்பாய்க்கு விஜயம் செய்த பொழுது, மேதாவின் திறமைகளை மெச்சித் தமது சுவஸ்த லிகிதபுத்தகத்தில் அவரது ஞாபகச் சின்னமாக, அவரைக் கையெழுத்திடச் சொல்லிப் பெருமைப் படுத்தினர். முடிவாகக் கூறுமிடத்து ஏறக்குறைய ஐம்பதாண்டுகள் இடைவிடாமல் தாய்நாட்டிற்கு ஊழியஞ் செய்தவரும், மேடையில் சொல் நயம் பொருள் நயங்கள் பொலிவுற நிமிடத்திற்கு நூற்றைம்பது வார்த்தைகளுக்குமேல் துரிதமாகவும் அழுத்தமாகவும் விளக்கமுறப் பேசியவரும், வங்காளி, பார்ஸி, முஸ்லிம்கள், தமிழர், தெலுங்கர் என்ற எவ்வித பேதமுமின்றி அனைவருக்கும் எல்லாவித நன்மைகளும் உண்டாகப் பாடுபட்டவரும், எதிலும் மிதமிஞ்சிப் பிரவேசித்துத் துன்பத்திற் காளாகாதவரும், ஆரோக்கிய திடகாத்ரரும், ஜாரதுருட்டிர (பார்ஸி) மதத்திலே தீவிர அனுஷ்டான முடையவரும், பரிபாலன வல்லமைகள் முற்றிலும் அமையப் பெற்றவரும், தேச விடுதலைக்காகப் பாடுபடும் பல்துறையினரும் போற்றுமாறு நடந்துகொண்டவரும், 'மனிதன்' என்னும் பௌருஷத் தன்மைக்கேற்ற இலக்கணங்கள் யாவும் மாணப் பெற்றவரும் மேதாவே ஆவார்.




## கமுகு மரம் (Areca Nut)

இப்பாக்குமரங்கள் கொட்டைப்பாக்குக்காகத் தோட்டங்களில் பயிர் செய்யப்படுகின்றன. பாக்குப்பட்டையிலிருந்து உரிக்கப்படும் நார் அவ்வளவு உபயோகமானதா யில்லை. முன்னர் வரையப்பெற்ற பதமுறைப்படி நயமுள்ள கம்பளரோமத்தைப்போன்ற நேர்த்தியான நார் இதினின்றும் உற்பத்திசெய்தல் கூடும். இப்பொழுது, பாக்கை எடுத்துக்கொண்டபின், இப்பட்டைகளை அடுப்பெரிக்கும் கருவியாகவும். போஜனபாத்திரமாகவும் ஜனங்கள் பயன் படுத்துகிறார்கள். இப்பட்டைகளினின்றும் நேர்த்தியான பட்டை நிகர்த்த நாரை உரித்தெடுத்தபின், எஞ்சியவற்றை மெத்தை தலையணை முதலியவற்றில் அடைப்பதற்கு உபயோகித்தால் அவை உயர்ந்த இலவம் பஞ்சைக்கூடப் பின்னடையச்செய்யும் தரத்தவாய் மிக்க மெதுவாயிருக்கும். பதப்படுத்துங்கால் பட்டைகளைப் பெரிய கட்டுகளாகக் கட்டி குளம்குட்டைகளிற் போட்டு நன்றாக ஊறவைக்க வேண்டும். மூன்றுமாதங்கள் கழிந்தபின், அக்கட்டுகளைத் தண்ணீரினின்று மெடுத்துப்பிழிந்து, சுத்தஜலத்தில் போட்டுக் கழுவினால், மேல் நார் உட்புறமுள்ள மிருதுவான நாருடன் சேர்ந்து ஒட்டிக்கொண்டிருக்கும். இவற்றை உரித்தோ துவைத்தோ வேறுபடுத்தலாம். இதன் உள்நார் பட்டையைவிட நயமாயும், நேர்த்தியாயும் உறுதியாயுமிருப்பதால் நூற்கவும்,நெய்யவும் சாயம் போடவும் ஏற்றதாயிருக்கின்றது.நமதுதேசத்தில் அநேகமாக எல்லாப்பாகங்களிலும் பாக்குமரங்கள் மலிந்து கிடக்கின்றமையால் வியாபாரமுகத்தில் இக்கைத்தொழிற்கு நல்ல லாபமேற்படுமென்பது திண்ணம்.

## சாய வேர்க்கொடி Madder)

நம்நாட்டு புறம்போக்கு நிலங்களிலும், சில வனபாகங்களிலும் இச்செடிகள் அடர்ந்து வளருகின்றன. இதன் பழங்களின்மீதும், தண்டுகளின் மேலும் பட்டையைவிட நேர்த்தியான நாருள்ளது. இளம்பிறைவடிவான இதன்கனிகளுள் சிறு விதைகளுள்ளன. இவ்வித்துகளின்மீது மிக நுட்பமான நாரிருக்கும். ஒவ்வொரு கனியிலும் சிலதான்யங்களின் எடையுள்ள நார்தான் கிடைக்கும். ஸ்பரிசத்தாற்கூட உணரமுடியாத அவ்வளவு மெதுவாயிருக்கும் இலேசான இந்நாரைத் தலையணை யுறையிலடைத்து அதன் நயத்தரத்தை நன்கறியலாம். இந்நார் ஒன்றோடொன்று முறுக்கடையாமல் அத்துணை வழவழப்பாகவும், பிசுக்குள்ளதாயுமிருக்கின்றமையால், தலையணையுறை முதலியவற்றிலடைக்கவே தகுந்ததாகும். ஒருமாதத்திற்குமேல் தண்ணீரில் இந்நார்களைப் புழுங்கவைத்து, சுத்தம் செய்தால் இவை பிசுபிசுப்பான தன்மை நீங்கி முறுக்கேறக்கூடிய நிலையை எய்தும். நெசவுத்தகுதியையும் அடையும். ஆனால் இச்செடிகள் யதேஷ்டமாகக் கிடைத்தாலொழிய, வியாபார தோரணைக்கு அவ்வளவு ஏற்றதாகாது.

## தென்னை உரிமட்டையின் உபயோகம்.

தென்னைமட்டைகள், கயிறுகள் முறுக்க நாராகவும், இழைக்கயிறாகவும், பாய் பின்னவும், சமுக்காளங்கள் நெய்யவும், தூரிகை துடைப்பநாராகவும் கப்பல்களில் பலவித உறுதியான உபயோகங்கட்கும் (Caulking) எப்பொழுதும் அடுப்பெரிக்கவும் உபயோகப்படும். இவற்றில் ஸர்ஜிகம் (Potash) பாஸ்வரிகா நிலம் (Phosphoric acid) முதலிய ரசாயனப் பொருள்கள் சாலவும் மல்கிக் கிடக்கின்றனவாதலின் இவ்வுரிமட்டை நாரைக்கொண்டு கயிறு திரிக்கும் கைத்தொழிற்குப் பயன்படுத்தினால் நல்ல லாபமுண்டாகும். பயன் கொடாத நிலங்களுக்கு இவற்றை எருவாக இட்டும் பயிர் செய்யலாம். காகித உற்பத்திக்குச் சேர்க்கப்படும் பதமடையாத பண்டங்களுள் இத்தென்னை நாரையும் (அதன் உறுதிபற்றி) கூட்டலா மென்பதில் தொழில் நிபுணர்களுள் அபிப்பிராயபேத மேற்பட்டிருப்பினும், காகிதக்கூடை செய்வதற்கும், சில முரட்டுக் கடுதாசிகள் செய்வதற்கும் இது தகுதியுள்ளதாகும். நல்ல பள பளப்புள்ளதும், நீண்டகாலம் கெடாதிருக்கக் கூடியதுமான அட்டைகளும், சுரசுரப்பான காகிதங்களும் இதைக்கொண்டு செய்யலாகும்.

### வேறு

### சில அனுபவ முறைகள்

எழுதும் மைத்தூள்:— (Ink powder), கருப்பு நிற மைத்தூள் செய்வதற்குக் கடுக்காய்த்தூள் 42 பங்கும், அயகந்த கேதம் (Ferreous sulphate), 30 பங்கும், கருவேலம் பிசின் 15 பங்கும், படிக்காரம். 6 பங்குமாகச் சேர்க்கவேண்டும். கடுக்காய்த்தோலை நன்றாகத் தண்ணீரில் கழுவிக் காயவைத்துப் படிக்காரத்தோடு கூட்டி மைபோலப் பொடிக்கவேண்டும். கருவம் பிசினும், அயகந்த கேதமும் தனித்தனியே நன்றாக பஸ்பத்தைப் போலத் தூள் செய்யப்பட்டபின் ஒன்றாகக் கூட்டப்படவேண்டும். தாமதியாமல் இப் பொடியைக் குப்பிகளிலடைத்தோ அல்லது பொட்டணமாகக் கட்டியோ காற்றுப்படாமல் வைத்தல் அவசியம். இந்தத் தூளைப்போட்டுத் தக்கவாறு தண்ணீர் ஊற்றினால், மை கருப்பாயும் கெடாமலும் இருக்கும். ஆனால் மையினடியில் வண்டல் தேங்கும். அதை வடித்துவிட வேண்டும். இந்த வண்டலும் கரையச் சுத்தமான மை வேண்டில் பின் வருமாறு செய்யலாம். கடுக்காயை நன்றாய் சுத்த ஜலத்தில் ஊறவைத்து எடுத்து சூர்ய வெப்பத்தாலேயே முற்றிலும் உலரச்செய்து எஞ்சியதை மற்றைய மூன்றுபொருள்களோடு சேர்த்துப் பொடிசெய்து விடவும். இம்முறையில் படிக்காரத்தைக் கூட்டுவதன் நோக்கம் கட்டியாக வண்டல் திரண்டு நிற்பதைப் போக்குதற்காம். இதற்குப் பதிலாக போரிக் (Boric) அல்லது சலிசிலிக் (Salicylic) திரவகங்களுள் ஏதேனு மொன்றில் தூளின் நூற்றுக்குப் பத்திலொரு பாகம் சேர்க்கலாம்.

2. மூங்கிலுக்கு மெருகெண்ணெய்:— மூன்று அவுன்ஸ் வெண்மையான அவலரக்கைப் பொடிசெய்து பத்து அவுன்ஸ் குழம்பான சுத்திசெய்யப்பட்ட மதுசாரத் (Methylated spirit) திரவத்திலே கலந்துவிடவும். இந்த மெருகெண்ணெயைக் கொண்டு மூங்கிலாற் செய்யப்பெற்ற சகல சாமான்களையும் நல்ல பளபளப்புள்ள தாக்கலாம்.

(இண்டஸ்ட்ரி.)

# தமிழர் இசைக்கலை.

(272-ம் பக்கத் தொடர்ச்சி)

(உறையூர்-ஸ்ரீ. வே. வரதராஜையங்கார்.)

---

**வர்ணங்கள்:—** ஸ்தாயீ, ஆரோகணம், அவரோகணம், சஞ்சாரம் என நான்கு திறத்தவை. வர்ணமாவது அழகு; செவிக்கினிமை.

**ஸ்தாயீ:—** என்பது ஒரே ஸ்வரத்தைப் பன்முறை சமமான மாத்திரைகள் இடையே கொடுத்துச் சொல்வது:— ச...ச...ச...ச.

**ஆரோகணம்:—** வரிசைப்படி இடைவெளி தந்து ஸ்வரத்தை மேலெடுத்து இசைத்தல்:— ச...ரி...க...ம...ப...த...நி.

**அவரோகணம்:—** வரிசையாக நிஷாதத்திலிருந்து இடையே சம மாத்திரைகொடுத்து இறக்கிப்பாடுதல்:— நி...த...ப...ம...க...ரி...ச.

**சஞ்சாரம்:—** மேற்கூறிய மூவகை சஞ்சாரங்களையும் கலந்து இசைத்தல்:— ச...ச...ச...நி...ம...ம...நி...ம...ப.

## 5 இராகம்

சப்த ஸ்வரங்களாலும் மேற்கூறிய ஸ்தாயீ, ஆரோகணம், அவரோகணம் சஞ்சாரமாகிய நால்வகை வர்ணங்களாலும் அழகுற வமைந்து செவிக்கின்பந் தருவதான தொனி இராக மெனப்படும். இராகமென்பது 'பண்' ஆகும். "பண்ணுறத் தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ்'மக்கள் வடமொழி யுடையார் இராகம்' என்றதைப் 'பண்' ணெனக் கொண்டிருந்தனர். ஏழு ஸ்வரங்களையும் பிறவற்றையுங் கொண்டு பண்ணப்படுதலின் '**பண்**' என்றனர் போலும். இதனை,

> பாவோ டிணைத லிசையென்றார் பண்ணென்றார்
> மேவார் பெருந்தான மெட்டானும்—பாவாய்
> எடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப்
> படுத்தமையாற் பண்ணென்று பார்.

எனவரும் ஏதுவாலும் உணர்க.

ஏழு ஸ்வரங்களும் கமகங்களோடு * சுருதியுடன்கூடித் தலைமை பெற்ற

---

* சுருதிச்சக்கரம் பின்னேரிடத்தில் வரும்.

'**புராதன சங்கீதம்**' என்னும் தலையங்கம் இனி 'தமிழர் இசைக்கலை' என்னும் பெயர்புனைந்து வெளிவரும். இதன்கண் தற்காலம் தமிழ் நாட்டில் வழக்கிலுள்ள ஆரிய சங்கீதமுறை போன்றே, தமிழர்க்கும் தனியே தமிழ் இசைக்கலை வெகு பழங்காலந் தொட்டே உண்டென்பதையும், அதனைத் தமிழர் எங்ஙனம் கையாண்டு வந்தன ரென்பதையும், அதற்குரிய பிறப்பிலக்கணம் முதலியவற்றையும், சிறப்புகளையும், இசை தழுவிவரும் பிறவற்றையும் ஒப்பிட்டுக்காட்டி, பழந்தமிழ் நூல்களின்றும் அவற்றைத் தக்க மேற்கோளுடன் விளக்கி, மயக்கமின்றி யாவரும் தமிழ் இசையின் திறத்தை யுணர இயன்றவரை எழுதி வரப்படும்.

முப்பத்திரண்டு இராகங்களை யெய்தி சிலவும். † கமகங்கள் பத்து. அவை ஆரோகணம் அவரோகணம், டாலு, ஆந்தோளம், ஸ்புரிதம், ஆஹதம், மூர்ச்சனை, திரியுச்சம், பிரத்யாகதம், கற்பிதம் என்பன. அவற்றுள்,

1. **ஆரோகணம்:**— ஸ்வரங்களை வரிசைப்படி மேலெடுத்து அகாரமாக இசைத்தல்: ச, ரி, க, ம, ப, த, நி, ச.

2. **அவரோகணம்:**— ஸ்வரங்களை வரிசைப்படி மேலிருந்து கீழிறக்கி இசைப்பது: ச, நி, த, ப, ம, க, ரி; ச. (இவ்வாரோகண அவரோகணங்களையே பிருகா என்பர்.

3. **டாலு:**— எடுத்த உடனே ஒரு ஸ்வரத்தை இசைப்பதும், மற்றொன்றைத் தொடக்கத்திற் காட்டி வேறொரு ஸ்வரத்தை முடிவில் புலப்படுத்துவதும்: பபாஸ மாஸகா.

4. **ஆந்தோளம்:**— முன்னும் பின்னுமாக ஸ்வரங்களை எழவைத்தல்— சரிசபாப சரிஸமாம.

5. **ஸ்புரிதம்:**— இரண்டிரண்டாக ஸ்வரங்களைப் பேசுதல்— சச, ரிரி, கக, மம,

6. **ஆஹதம்:**—ஒரு ஸ்வரத்திலிருந்து ஆரோகணத்தில் மற்றொரு ஸ்வரத்திற்கு விரைந்தேறுதல்: சரிரிக, கமமப.

7. **மூர்ச்சனை:**— ஆரோகண அவரோகண வாயிலான் இராகத்தின் ஸ்வர ரூபத்தை உணர்த்துந் தன்மை. சரிமபதஸ, ஸநிதபமகரிஸ.

8. **திரியுச்சம்:**— உயர்த்தி மூன்று மூன்று ஸ்வரங்களாகப் பாடுதல்: சசச, ரிரிரி, ககக, மமம.

9. **பிரத்யாகதம்:**— ஒரு ஸ்வரத்திலிருந்து அவரோகணத்தில் மற்றொரு ஸ்வரத்திற்கு விரைந்தேறுதல் சநிநி தத பப மம.

10. **கம்பிதம்:**— ஒரே ஸ்வரத்தை அசைத்துக் கொண்டே இருப்பது: பபபபப. இதில் இனிமை மிகுதி,

இங்ஙனம் மேற்கூறியவற்றோடு எய்தப்பெற்ற இராகங்கள் (1) மேளகர்த்தா ஜன்யம் எனவும், (2) சர்பூர்ணம் சாடவம் ஔடுவம் எனவும் (3) சுத்தம் வக்கிரம் எனவும், (4) சுத்தம் சாயாலகம் சங்கீர்ணம் எனவும், (5) மித்திரம் சத்ரு வெனவும், (6) புருடஸ்திரீ தாதீ புத்ர மெனவும், (7) இராகாங்கம் பாஷாங்கம், கிரியாங்கம், உபாங்கம், எனவும் எழுதிறப்படும். இவற்றின் விளக்கம் பின்வருமாறு:

---

† திருவிளையாடற் புராணம்.

† இவை, திரிபம், ஸ்புரிதம், கம்பிதம், லீனம், அந்தோளம், வலி, திரிபின்னம், குறுலம், ஆஹதம், உல்லாளிதம், பல்லவதம், கும்பிதம், முத்ரிதம், காமிதம், மிச்ரிதம் எனப் பதினைந்தென்பர் வடமொழி இசைநூலோர். அவற்றுள் பத்தே தமிழ்நூல்களுட் காணப்படுவன. இதற்குக் காரணம் இப்பத்துவித கமகங்களே தமிழிசை நூலோரால் சாலும் எனக் கொள்ளப்பட்டது போலும். அபிதான சிந்தாமணியில் கொள்ளப் பெற்றவை இவை பத்துமேயாம்.

1. **மேளகர்த்தா:—** ஆரோகண அவரோகணங்கள் குறைவற அமைந்திருக்கும் இராகங்கள். **ஜன்யம்** மேளகர்த்தா நீங்கிய ஏனைய இராகங்கள்.

2. **சம்பூர்ணம்:—** ஏழு ஸ்வரங்களும் அமையப்பெற்ற இராகங்கள். **சாடவம்** ஆறு ஸ்வரங்களுள்ள இராகங்கள். **ஔடுவம்** ஐந்து ஸ்வரங்கள் பொருந்தியவை.

3. **சுத்தம்:—** ஸ்வரங்கள் 'நிப' என்பதுபோல் முன்பின்னாக வாராது வரிசை தவறாது வரும் இராகங்கள். **வக்கிரம்** ஸ்வரங்கள் முன்னும் பின்னும் பலபடியாக வருவன. (4) **சுத்தம்** இசைநூல் வரையறைப்படி ஸ்வரங்கள் அமைந்த இராகங்கள். **சாயாலகம்** பிற இராகங்களின் சாயையுடைய பண்கள். **சங்கீர்ணம்** மேலிரண்டும் (சுத்தமும் சாயாலகமும்) அமைந்த பண்கள். (5) **மித்திரம்** ஒரு இராகத்தைப் பாடியபின் எந்த இராகத்தை இசைத்தால் இனிமை மிகுமோ அவையே மித்திர ராகங்கள்; இனிமை பயக்காதவை சத்ரு ராகங்கள்.

மேலே தலைமை பற்றிவரும் பண்கள் முப்பதிரண்டென்றோம். மேகவிரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், கைசிகம், வராளி, மலஹரி, பல்லதி, இந்தோளம், படமஞ்சரி, நாராயணி, நாட்டை, வசந்தம், பௌளி, சீராகம், பங்காளம், கூர்ச்சரி, கௌளி, காந்தாரி, காம்போதி, இலலிதை, தேவக்கிரியை, தேசாட்சி, மாளவி, சாவேரி, தேசீ, சாரங்கம், தோடி, இராமக்கிரியை, வேளாவளி, பைரவி, குண்டலக்கிரியை, தன்னியாசி என்பன அவ்விராகங்கள்.

இவ்விராகங்கள் முப்பத்திரண்டும், புருடராக மென்றும் ஸ்திரீராக மென்றும் இருபெரும் பிரிவின்பாற்படுவனவாம். புருட விராகங்கள் எட்டு, ஏற்ற ஸ்திரீ ராகங்கள் இருபத்துநான்கு. அவையாவன:

| புருடர்கள். | ஸ்திரீராகங்கள் |
|---|---|
| 1. பைரவி. | தேவக்கிரியா, மேகவிரஞ்சி, குறிஞ்சி |
| 2. பூபாளம். | வேளாவளி, மலஹரி, பௌளி. |
| 3. சீராகம். | இந்தோளம், பல்லதி. |
| 4. படமஞ்சரி. | தேசீ, இலலிதை, தோடி. |
| 5. வசந்தம் | இராமக்கிரியை, வராளி, கைசிகம். |
| 6. மாளவி | நாராயணி, குண்டலக்கிரியை, கூர்ச்சரி. |
| 7. பங்காளம். | தன்னியாசி, காம்போதி, கௌளி. |
| 8. நாட்டை. | தேசாக்ஷரி, காந்தாரி, சாரங்கம். |

இப்புருட விராகங்களுக்கும் அவ்வவற்றின் ஸ்திரீ ராகங்களுக்குமாக துதி ராகங்களும் புத்திர ராகங்களும் முறையே உண்டு. இவை சாதி, அதிதேவதை, குணம், இரஸம், வேதம் முதலியபலவும் உளவாகி இலங்குவன. பின்வரும் படத்தால் இவையனைத்தும் புலனும்.

| எண் | புருடராகம் | தூதிராகம் | புத்ரராகம் | சாதி | அதிதேவதை | குணம் | இரசம் | வேதம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பைரவி | கன்னடம் | காபி | பிராமண | ஈசன் | ராஜஸம் | ரௌத்திரம் | சாம |
| 2 | பூபாளம் | தேசாக்ஷி தேவகாந்தாரி | நீலாம்புரி | ,, | திருமால் | ,, | சிருங்காரம் | ,, |
| 3 | ஸ்ரீராகம் | தேசி | மாருவ ராமக் கிரியை | க்ஷத்திரிய | கலைமகள் | தாமஸம் | பீபத்ஸ | யஜுர் |
| 4 | படமஞ்சரி | அசாவேரி, | சங்கராபரணம், மந்தாரி சௌராட்டிர கேதாரம். | ,, | இலக்குமி | ,, | கருணை | ,, |
| 5 | வசந்தம் | மோகனம் | முகாரி, லலித, தோடி தன்னியாசி நாராயணி கௌளி | வைசிய | சூரியன் | சாத்வீகம் | ஹாஸ்ய | இருக்கு |
| 6 | மாளவி | இந்தோளி | பந்துவராளி வராளி, கௌளம் | ,, | நாரதர் | ,, | பயானக | ,, |
| 7 | பங்காளம் | போகி | பூர்வி, சாவேரி, பியாகடை, பௌளி | சூத்திர | விநாயகர் | ராஜஸம் | அத்புத | அதர்வண |
| 8 | நாட்டை | வேளாவளி | மனோஹரி யமுனை | ,, | தும்புருதேவர் | ,, | வீர | ,, |

# புத்தரது அரியபெரிய தத்துவங்கள்.

## (வே கோவிந்தசாமி.)

(1) துக்கம், (2) துக்கோற்பத்தி, (3) துக்க நிவாரணம், (4) துக்க நிவாரண மார்க்கம்.

**முதல் தத்துவம்:—** துக்கத்தைப் பற்றியது. கிடைத்தற்கரிய செல்வக் களஞ்சியம் என யாவரும் எண்ணும் இவ்வுலகவாழ்வு, தீராத் துன்பங்களும், சஞ்சலங்களும் நிறைந்துள்ள ஓர் துக்கசாகரமே யாகும். இத்தகைய நீர்க்கோல வாழ்வில் வருத்தமும், உபாதிகளுமே மிகுதியானவை. இன்பமாக மதிக்கப் படும் பாகங்கள் யாவும் பறவைகள் வதிந்து பறப்பதைப் போன்றன. அன்னையின் கருப்பத்தினின்றுந் தலைகீழாய்ப் பிறத்தலுந் துன்பமே. குழந்தைப் பருவமும் துன்பமே. வாலிபப் பருவமும் துன்பமே. முதிர்ந்த பருவத்தில் நஞ்சொல்லை எவரும் மதியாராகி கைக் கோலையே கண்ணாகக் கொண்டு இறுதியில் நோய்க்காளராகி இறத்தலுந் துன்பமேயாம். இவைகளே நமது வாணாளை நிரப்புகின்றன.

மனைவியிடத்து வைக்கும் அன்புத்தளையானது இனியதே. ஆனால், நாம் அணைத்து முத்தந்தந்த இதழ்கள் எரிதழலை யணைக்கவேண்டிவரும்.

போரில் ஆண்மையுடன் போர் புரிதல் வீரத்தனமே. இருப்பினும் முடிமன்னர்களது சதையின் எலும்புகளும், கழுகுகள் கொத்தித் தின்பதற் குரியனவே.

இவ்வுலகம் இன்பகரமானது. கானகங்களில் வதிந்து கிடக்கும் ஜந்துக்கள் ஒன்றையொன்று கொன்றுதின்று சீவிக்கின்றன. ஆகாயம் முழுவதும் நீலக்கல்லினால் நிரப்பப் பட்டுள்ளது. ஆனால் அதுமனிதர்கள் பசியால் நைந்து வருந்துங் காலத்து ஓர்துளி ஜலமேனுந் தருவதில்லை.

நோயாளிகளையும், புலம்புவோர்களையும், தளர்ச்சியுற்றுத் தனிமையாய் கைக்கோலையே கண்ணாகக்கொண்டுளோர் தம்மையும் "நீர் இவ்வாழ்க்கையை விரும்புகிறீரா" என்று கேட்பின், "இப்புவியில் ஜனித்தவுடன் அழுந் தன்மைவாய்ந்த சிசுமிகவும் புத்திகூர்மையுள்ளது" என்று பதிலளிப்பர்.

**இரண்டாவது தத்துவம்:—** துக்கோற்பத்தி. இந்திரியங்களுக்கு விஷயங்களில் அபிமானத்தோடுகூடிய சம்பந்தமானது சீதோஷ்ண சுகதுக்காதிகளை உண்டு பண்ணுகிறது. ஆகையால் அப்பேர்ப்பட்ட அபிமானத்தோடு கூடிய விஷயேந்திரிய சம்பந்தங்களை அறவே யொழித்தல் அவசியம்.

இந்திரியங்களும் விஷயங்களும் அபிமானத்துடன் சம்பந்தப் படுவதால் ஆசை அல்லது காமம் உண்டாகிறது. நிலையற்ற வஸ்துக்களின்மீது நமக்குள்ள பற்றினால் நாம் மதிதளர்கிறோம்,— மாயையில் சுழலுதல் இதுவேயாகும். பொய்யான உலகத்தோற்றங்களை மெய்யென்று நம்பி மயங்குகிறோம். இவ்வண்ணம் மயங்குவதால் சண்டை சச்சரவுகளும், காமம், லோபம், குரோதம், அஹங்காரம் முதலிய துர்க்குணங்களும் உண்டாகின்றன.

துவரை விதைத்த இடத்தில் புல் பூண்டுகள் செழிப்பாக முளைக்கின்றன. துவரை விளையாம லழிகிறது. அவ்வண்ணமே புண்ணியத்தைப் புரிந்து ஈடேறுவதற்கு மாறாகப் பாவச்செயல்களை செய்து நாம் நரகமடைகிறோம். கர்மம் மேலிட்டிருப்பதால், அதை யொழிப்பதற்கு மறுபிறவி யெடுக்கிறோம். பிறவி யெடுக்குந்தோறும் பாவ மூட்டையே சேகரிக்கிறோம்.

**மூன்றாவது தத்துவம்:—** துக்கநிவாரணம். உயிர்மேலுள்ள ஆசையையும், மனைவி மக்கள் தனதானியம் முதலாகிய அழியுந்தன்மை வாய்ந்த பொருள்களிடம் வைத்திருக்கும் கேவல ஆசையையும் விட்டொழித்தல் வேண்டும். மற்

றும், அறநெறியைக் கைப்பற்றி யொழுகுதலும், மிருதுவான வசனங்களைக் கூறுதலும், தனது பிராணன் தனக்கு எப்படித் தித்திப்போ, அம்மாதிரியே ஒவ்வொரு ஜீவனுக்கும், தனது பிராணன் தித்திப்பாயிருக்குமென் றெண்ணி யாதொரு பிராணிக்கும் எவ்விதத் தீங்கும் புரியாதிருத்தலும் நாம் நமது வாழ் நாட்களில் கடைபிடித்தொழுக வேண்டிய முக்கிய கடமைகளாகும்.

இவைகளே இம்மையில் ஒவ்வொருவரும்பெறுதற்கேற்ற நீடித்தபுகழையும், மறுமையில் மோட்சத்தையும் அளிக்கவல்லதாகும். எனவே, நன்னெறியைக் கைப்பற்ற நமக்குள்ள துக்கமொழியும். எவ்வண்ணம் எண்ணெயின்றி விளக் கெரியாதோ, அதுபோல, துக்கமொழிந்தால் பிறத்தலும் இறத்தலும் நீங்கும்.

**நான்காவது தத்துவம்:**—துக்க நிவாரண மார்க்கம். நாம் நன்னெறியைக் கைப்பிடித்தொழுகல்வேண்டும். அதுவே நமக்கு துக்கத்தையொழித்து என்று மழியாப் பேரின்பத்தைத் தரவல்லது. அது எட்டுவகைப்படும். அவையாவன :

(1) **ஜீவகாருண்யம்:**—யானைமுதல் எறும்பு ஈறுகவுள்ள ஜந்துக்களிடம் கொடுமையை யொழித்துப் பிரியத்துடனிருத்தல் வேண்டும்.

(2) **நல்லெண்ணம்:**—நாம் எண்ணும் எண்ணங்கள் யாவும் பிறருக்குத் தீமை டரிவதாயிருத்தல் கூடாது. பிறருக்கு நன்மையையும், ஹிதத்தையும் தரத்தக்கதாயிருத்தல் வேண்டும்.

(3) **நல்லுரை:**—நமது உதடுகளை அரண்மனைவாயிற் கதவுகளைப்போல் பாதுகாத்தல் வேண்டும். நமது வாயினின்றும் வரும் ஒவ்வொரு சொல்லும் சாந்தமானதாயும், ஹிதத்தைத் தரத்தக்கதாயுமிருக்கவேண்டும். "இன்சொலா லன்றிஇருநீர் வியனுலகம் வன்சொலா லென்றும் மகிழாதே" என்றதூஉங் காண்க.

(4) **நன்னடக்கை:**—நாம் செய்யும் ஒவ்வொரு செய்கையும் தீமையை யொழித்து, மனச்சாட்சியைவஹித்து நன்மையைத் தரத்தக்கதாயிருக்கவேண் டும். வெள்ளிக்கம்பியினுல் கோக்கப்பட்ட பளிங்குமணிகளுள்ள மாலையில், எவ்வண்ணம் வெள்ளிக்கம்பி நன்கு புலப்படுமோ, அதுபோல் கருணை, அன்பு, உண்மை முதலான நற்குணங்கள் நமது நற்செயல்களால் தோற்றவேண்டும்.

**மற்ற நான்காவன:**—சித்த சுத்தியும், நற்சிந்தனையும், மனச் சமாதான மும், மனோ வைராக்கியமு மாகும்.

**புத்தர் ஏற்படுத்திய ஐந்து முக்கிய கோட்பாடுகள்.**

(1) ஜீவஹிம்சை புரியாதே.

(2) கைம்மாறு கருதாது பிறருக்கு உன்னாலியன்ற மட்டில் கொடு. பிறர் கொடுக்க நீயும் பெற்றுக்கொள். ஆனால், பிறர்பொருளைப் பேராசையாலும், துராக்கிருதத்தாலும், வஞ்சனையாலும் அபகரிக்க எண்ணாதே.

(3) பொய் பேசுவதொழி. பொய்க்கரி புகலாதே. கோள் சொல்லுவதை யகற்று.

(4) மதுபானத்தை விலக்கு, அது தீங்கையே விளைவிக்கும்.

(5) பிறர் மனைவியை விழையாதே.

அன்பர்களே, "புத்தரது அரிய பெரிய தத்துவங்களை" தெரிந்து கொண்டதோ டன்றி, ஒவ்வொருவரும் முற்றிலும் கைப்பற்றி யொழுக வேண்டு மென்ற எண்ணங் கொண்டே இவ்வியாசத்தை வெளியிடலானேன். இறைவன் நமக்கு நன்மதி தந்து நலம் புரிவானாக.

# ஆசார்ய மண்டனமிஸ்ர சம்வாதம்.

(பண்டித. K. V. தேவராஜ சாஸ்திரிகள்.)

**இது வித்யாரண்ய சுவாமிகள் செய்த சங்கர** விஜயம் **எட்டாவது சர்க்கத்தின் மொழி பெயர்ப்பு.**

1. ஆதிசங்கர பகவத் பாதாசார்யர் மண்டனமிஸ்ரரோடு வாதம் செய்ய மாஹிஷ்மதி நகருக்குச் சென்றார். அங்கு தண்ணீர் கொண்டுவரச் செல்லும் பெண்களைப் பார்த்து மண்டனருடைய கிரஹம் எது என வினவ, அப்பெண்களும் சங்கரரைக்கண்டு சந்தோஷித்து, எவ்வீட்டின் வாயிலில் கிளிகள் "வேதம் ஸ்வத: பிரமாணம் பரதப் பிரமாணம்" என்றும் "கர்மம் பலனைக் கொடுக்கும், கடவுள்தான் பலனைக்கொடுப்பவர்" என்றும், "உலகம் நித்தமென்றும், அநித்த" மென்றும் வாதம் செய்துகொண் டிருக்கின்றனவோ, அதுவே மண்டனருடைய வீடு என்று கூறினர்.

2. அவர்களது இனிய மொழிகளைக் கேட்டு ஆச்சர்யம் கொண்ட ஆசார்யார் மண்டனருடைய வீட்டிற்குச் சென்று பார்த்தபொழுது கதவுகளெல்லாம் அடைக்கப்பட் டிருப்பதைக்கண்டு சற்று யோசித்து, யோகசக்தியால் ஆகாய வழியாக வீட்டின் முற்றத்தில் இறங்கினர். அங்கு பிரம்மாவின் அவதாரமான மண்டனர், தபோசக்தியால் பூர்வ மீமாம்ச சாஸ்திரத்தின் ஆசாரியரான ஜெயிமினி மகரிஷியையும், உத்தரமீமாம்ஸ சாஸ்திரத்தின் (வேதாந்தத்தின்) ஆசிரியரான வியாஸ ரிஷியையும், ச்ராத்தத்திற்கு நிமந்திரித்து, அவர்களது செந்தாமரைப்பூப் போன்ற பாதங்களைக் கழுவிக்கொண்டிருப்பதைப் பார்த்து, ஆகாயத்திலிருந்திறங்கி ரிஷிகளுக்கருகில் உட்கார்ந்தார். சிகையும், யக்ஞோபவீதமு மில்லாமல் காஷாய வஸ்திரம் தரித்திருக்கும் அவரை சந்நியாசி என்று அறிந்து, மண்டனர் சற்றுச் சினங்கொண்டார். பிறகு அவரிருவரும் இவ்வாறு பேசிக்கொண்டனர்.

3. **மண்டனர்:**—"கூதோ முண்டீ?" சந்நியாசியாகிய தாங்கள் எப்படி வந்தீர்கள்? (கதவுகளெல்லாம் அடைக்கப் பட்டிருக்கிற படியால் எப்படி வந்தீர் என்பது மண்டனருடைய கருத்து.)

**ஆசார்யர்:**—"ஆகலாத் முண்டீ" கழுத்து வரையில் க்ஷௌரம் செய்துகொண்டேன். (முண்டீ என்ற பதத்திற்குச் சந்நியாசி என்றும், க்ஷௌரம் செய்துகொண்டவன் என்றும் அர்த்தம். ஆசார்யர் இரண்டாவது அர்த்தத்தைக் கொண்டு பதில் கூறினர்.)

**மண்டனர்:**—"பந்தாஸ்தே ப்ருச்யதேமயா." என்னால் உனது வழி கேட்கப் படுகிறது.

**ஆசார்யர்:**—"கிமாக பந்தா?" வழி என்ன சொல்லிற்று?

**மண்டனர்:**—"த்வன்மாதா முண்டேத்யாஹ." உனது தாயார் விதவை என்று சொல்லிற்று.

**ஆசார்யர்:**—"பந்தானம் த்வம் அபிருச்சஃ த்துவாம் பந்தாஃ பிரத்யாஹ மண்டன. த்வன்மாதேத்யத்ர சப்தோயம் நமாம்பூருயாத் அபிருச்சகம்." ஓ மண்டன! நீ வழியைக் கேட்டாய். உன்னைப்பார்த்து வழி பதில் சொல்லிற்று. த்வன் மாதா என்ற விடத்தில் த்வத் என்ற பதம் உன்னையே குறிக்கும். வழியைப் பார்த்து யாதொன்றும் கேட்காத என்னை எவ்வாறு குறிக்கும்?

மண்டனர்:—"அகோ! பீதா கிமுசரா?" ஆச்சர்யம்! நீ கள் குடித்தாயா?

ஆசார்யர்:—"நைவஸ்வதோ யதஃ ஸ்மர" அல்ல. கள் வெண்மை நிற முடையது. (பீதா என்ற பதத்திற்கு குடிக்கப் பட்டதா? மஞ்சள் நிற முடையதா? என்று மர்த்தம். மஞ்சள் நிறமுடையதா வென்று கேட்டதாக வைத்துக்கொண்டு பதில் கூறினர்.)

மண்டனர்:-"கிம்த்வம்ஜாஞவி தத்வர்ணம்?" நீ அதன் நிறம் அறிவாயா?

ஆசார்யர்:—"அஹம் வர்ணம். பவான்ரஸம்" நான் நிறமறிவேன். நீ ருசி அறிவாய்.

மண்டனர்:—"கந்தாம் வகஸி துர்புத்தே காதபேஞ பிதுர்வகாம் சிகாயக்ஞோபவீதாப்யாம் கஸ்தே பாரோபவிஷ்யதி?" ஓ! துர்ப்புத்தியே! கழுதை கூடச் சுமக்க முடியாத கந்தையைச் சுமக்கிறாய். சிகை, யக்ஞோபவீதம், இவை இரண்டும் உனக்குப் பாரமா?

ஆசார்யர்:—"கந்தாம் வகாமி துர்ப்புத்தே தவபித்ரா பிதுர்பராம் சிகா யக்ஞோபவீதாப்யாம் சுருதே: பாரோபவிஷ்யதி" உனது தகப்பனாலும் சுமக்கமுடியாத கந்தையைச் சுமக்கிறேன். சிகை, யக்ஞோபவீதம் இவ்விரண்டும் வேதத்திற்கு ஒரு பெரும் பாரமாகும்.

மண்டனர்:—"த்யக்த்வா பாணிக்ருகதீம் ஸ்வாம் அசக்தியா பரிரக்ஷணே சிஷ்ய புஸ்தக பாரேச்சோஃ வியாக்யாதா பிரம்மநிஷ்டதா." தான் அக்னி சாக்ஷியாக பாணிக்கிரகணம் செய்து மணந்த மனைவியைக் காப்பாற்ற முடியாமல் விட்டு விட்டு, சிஷர்களையும், புஸ்தகங்களையும் வைத்துக் கொண்டிருக்கும் உனது பிரம்மநிஷ்டை வெளியாய் விட்டது.

ஆசார்யர்:—"குரு சுச்ரூஷணாலஸ்யாத் சமாவர்த்யகுரோஃ குலாத் ஸ்த்ரியஃ சுச்ரூஷமாணஸ்ய வியாக்யாதா கர்மநிஷ்டதா." குருவுக்குப் பணிவிடை செய்ய முடியாமல் குரு குலத்தை விட்டுவந்து பெண்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கும் உனது கர்மநிஷ்டையும் வெளியாகி விட்டது.

மண்டனர்:—"ஸ்திதோஷி யோக்ஷிதாம் கர்பேதாபிரேவ விவர்த்திதஃ அஹோ கிருதக்னதா மூர்க்ககதம்தாயேவ நிந்தஷி?" பெண்களின் கர்ப்பத்தில் பத்து மாதமிருந்து, அவர்களால் வளர்க்கப்பட்ட நீ நன்றியறிவில்லாமல் ஏன் அவர்களை தூஷிக்கிறாய்?

ஆசார்யர்:—"யாஸாம் ஸ்தன்யம் த்வயாபீதம் யாஸாம் ஜாதோஷி யோனிதஃ தாஸு மூர்க்கதம ஸ்த்ரீஷு பசுவதத்திரமஸேகதம்?" பெண்களின் யோனியிலிருந்து பிறந்து அவர்களின் ஸ்தன்யத்தைப் பானம் செய்து வளர்ந்த நீ மிருகங்களைப்போல் எவ்வாறு ரமிக்கிறாய்?

மண்டனர்:—"வீரஹத்யாம் அவாப்தோஷி வன்ஹீன் வுத்வாஸ்ய யத்னதஃ" அக்னி கார்யத்தை விட்டு விட்டு நீ வீரஹத்யா பாபத்தை யடைந்தவனாயிருக்கிறாய்.

ஆசார்யர்:—"ஆத்மாஹத்யா அவாப்த்தஸ்த்வம் அவிதித்வாபரம் பதம்" பரமபதத்தை அறியாமல் நீயும் ஆத்மஹத்யா பாபத்தை யடைந்தவனாயிருக்கிறாய்.

மண்டனர்:—"தௌவாரிகான் வஞ்சயித்வா கதம் ஸ்தேநவத் ஆகதஃ?" வாயில் காப்பவர்களை ஏமாற்றித் திருடன்போல் எப்படி வந்தாய்?

**ஆசார்யர்:**—"பிக்ஷுப்யோ அன்னமதத்வாத்வம் ஸ்தேனவத் போக்ஷ்யஸே கதம்?" சந்நியாசிகளுக்கு அன்னமளிக்காமல் திருடன்போல் எப்படித் தின்கிறாய்?

**மண்டனர்:**—"க்வபிரம்ம? க்வசதுர்மேதாஃ? க்வசந்யாஸிஃ? க்வவாகலிஃ? ஸ்வாத்வன்ன பக்ஷகாமேன வேஷோயம் யோகிநாம்திருதஃ" உனது துஷ்ட புத்தி யெங்கே? கலியுக மெங்கே? சந்நியாச மெங்கே? ருசியான அன்னத்தைப் புசிக்கலாமென்று சந்நியாசத்தை எடுத்துக் கொண்டாய் என்று நினைக்கிறேன்.

**ஆசார்யர்:**—"க்வஸ்வர்கஃ? க்வதுராசாரஃ? க்வாக்னிகோத்ரம்? க்வவாகலிஃ? மன்யேமைதுனகாமேன வேஷோயம் கர்மிணாம்த்ருதஃ" உனது அனுசாரமெங்கே? சுவர்க்கம் எங்கே? கலியுக மெங்கே? உனது அக்னிகோத்திரமெங்கே? பெண்களுடன் சுகப்படலாமென்று இந்த வேஷத்தை எடுத்துக் கொண்டாய் என்று நினைக்கிறேன்.

4. இவ்வாறு இருவரும் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டு ஜெயிமினி மண்டனரைப் புன்சிரிப்புடன் பார்த்தார். வியாஸரும் மண்டனரைப் பார்த்து, "ஓ மண்டனரே! புத்ரேஷணை, வித்தேஷணை, கலத்ரேஷணைகளை உபேக்ஷித்து ஆத்மதத்வத்தை யறிந்த சந்நியாசிகளைப் பார்த்து இவ்வாறு பேசுவது உசிதமல்ல. ஆகையால் பிரத்யக்ஷமாக விஷ்ணுவே வந்திருக்கிறாரென்றெண்ணி ச்ரார்த்தத்திற்கு நிமந்தரணம் செய்யும்" என்று சொன்னார்.

5. மண்டனரும் சாஸ்திரங்களையெல்லா மறிந்த வியாஸரின் வார்த்தையைக்கேட்டு அவரையும் பிக்ஷைக்கு அழைத்தார். பிறகு ஆசார்யரும், "ஓ மண்டனரே! நான் தங்களிடத்தில் அன்ன பிக்ஷைக்காக வரவில்லை. எனக்கு வாதபிக்ஷை அளிக்கவேண்டும். வேதங்களின் சிரஸாகிய உபநிஷத்தின் கருத்தான ஜீவப்பிரம்ம ஐக்யத்தை பிரசாரம் செய்வதைத் தவிர எனக்கு வேறு ஒருகாரியமு மில்லை. எப்பொழுதும் யாகாதிக்ரியைகளைச் செய்துகொண்டிருக்கும் நீ அந்தமதத்தை அவமதித்து விட்டாய். ஆகையால் என்னுடன் வாதம் செய்யவேண்டும். அல்லது தோல்வியடைந்தேன் என்றாவது சொல்லி, எனக்கு மாணுக்கனாக வேண்டும்" என்று சொன்னார்.

6. இதைக்கேட்டு மண்டனரும் ஆச்சர்யங்கொண்டு "ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனுடன் வாதம் செய்தபோதிலும், நான் தோற்பவனல்லன். வியாஸருடைய மதமாகிய அத்வைதத்தைப் பின்பற்றுபவனுமல்லன். பலநாளாக வாதம்செய்ய யாராகிலும் வரமாட்டார்களா வென்று ஆவலுடன் எதிர்பார்த்திருக்கும் எனக்கு, இன்றைய தினம்தான் சுதினம். நம்மிருவருக்கும் வாதம் நடைபெறவேண்டும். இதுகாலம் சாஸ்திரங்களில் நாம் செய்து வந்த சிரவணம் பலன்பெற வேண்டும். நான் வாதத்தில ஸர்வக்ஞனை ஈஸ்வரனைக்கூட வெல்வேன். எனது வாதம்செய்யும் திறமையை நீ கேட்டதில்லைபோலும். இப்பொழுது மத்யான்ன காலமாய்விட்டது. அனுஷ்டானங்களைச் செய்து முடிப்போம்" என்று சொன்னார். பிறகு ரிஷிகளைப் பார்த்து "ஓ ரிஷிகளே! நாளையதினம் வாதம் நடைபெறும். தாங்களிருவரும் சாக்ஷிகளாக இருக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

7. ரிஷிகளும் மண்டனரைப் பார்த்து "சரஸ்வதியின் அவதாரமான உனது மனைவியை சாக்ஷியாக வைத்துக் கொண்டு வாதம் செய்யுங்கள்" என்று சொல்லினர். பிறகு மண்டனர் மூன்று ரிஷிகளையும் சாஸ்திர முறைப்

படி பூஜித்து, அன்னமளித்து, சாமரம்வீசி உபசரித்தார். போஜனம் செய்த பிறகு, அம்மூன்று பேர்களும் சில விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்து, மண்டனரது கிருகத்தை விட்டுப்புறப்பட்டு நர்மதையாற்றின் கரைக்கு வந்தனர். அங்கு ஜெயிமினியும், வியாஸரும், அந்தர்தானம் செய்தார்கள். ஆசார்யர் அங்கு ஓர் தேவாலயத்தில் இரவில் தமது மாணாக்கர்களுடன், தாம் ரிஷிகளைச் சந்தித்த சமாசாரங்களையும், மண்டனருக்கும் தமக்கும் நேர்ந்த சம்வாதத்தையும் பற்றி பேசிக்கொண்டிருந்து, அதிகாலையில், ஸ்நானத்திற்குப் பிறகு அனுஷ்டானங்களைச் செய்துமுடித்து, மண்டனருடைய கிரஹத்திற்குச் சென்று வித்வான்கள் நிறைந்திருக்கும் சபையிலுட்கார்ந்தார்.

8. பிறகு மண்டனர் தமது மனைவியைச் சாக்ஷியாக வைத்துக்கொண்டு வாதம் செய்யலாம் என்றுசொல்ல, ஆசார்யரும் தமது மதத்தை இவ்வாறு சபையில் உபந்யஸித்தார். "பிரம்மம் ஏகம் அது சத்சித் ஆனந்தரூபம், நிர்க்குணம், நிஷ்க்ரியம், நிரவயவம், அசப்தம், அஸ்பரிசம், அரூபம், அவ்யயம், அரசம், அகந்தம், நித்யம். அது மாயையுடன் சேர்ந்து, இப்பெரிய உலக வடிவமாக விளங்குகிறது. எப்படி ஒரு கிளிஞ்சல் வெள்ளியாகவும் கயிறுபாம்பாகவும் தோன்றுகின்றதோ, அப்படி பிரம்மம் உலக வடிவமாகத்தோன்றுகின்றது. இது வெள்ளியல்ல, கிளிஞ்சல்தான் என்ற ஞானத்தால் வெள்ளிபோய் கிளிஞ்சல் தோன்றுகிறது. அப்படி அதிஷ்டானமான பிரம்மத்தின் ஞானத்தால் பிரபஞ்சம் போய்விடுகிறது. இதற்கு "ஏகமேவா த்விதீயம்" சத்யம், ஞானம், அனந்தம், விக்ஞானமானந்தம் பிரம்மா. சர்வம் கல்விதம் பிரம்மா. வாசாரம்பணம் விகாரோ நாமதேயம், ம்ருத்யகேத்யேவ சத்யம்" இது முதலிய அநேகம் உபநிஷத்து வாக்கியங்கள் பிரமாணம் என்று சொல்லி "இந்தவாதத்தில் நான் தோல்வியடைந்தால் இக்காவி வஸ்திரத்தை விட்டு, சுக்ல வஸ்திரத்தைத் தரித்துக்கொள்வேன்" என்று பிரதிக்ஞையும் செய்தார்.

9. மண்டன மிச்ரரும், "ஜீவப்பிரம்ம ஐக்கியத்தைச் சொல்லும் வேத வாக்கியங்கள் பிரமாணமல்ல. ஏனென்றால் வேதவாக்கியங்களெல்லாம், ஏதாகிலும் ஒருகிரியைச் சொல்லுகின்றன. யாகாதிக்கிரியைகள் சொல்லும் வேதவாக்கியங்கள்தான் பிரமாணம். உலகத்திலும், "குடத்தைக் கொண்டுவா, கொண்டுபோ" என்று கிரியையைச் சொல்லும் வாக்கியங்கள்தான் பிரமாணமாகும். முற்கூறிய உபநிஷத் வாக்கியங்களோ, ஒரு கிரியையும் சொல்லவில்லை. யாகாதிக்கிரியைகளைச் செய்வதால் மாத்திரம் மோக்ஷம் கிடைக்கும். ஒவ்வொரு மனிதனும் உயிரோடிருக்கும் வரையில், யாகாதிக்கிரியைகளைச் செய்தே தீரவேண்டும். "ஆம்நாயஸ்யக்ரியார்த்தத்வாத் ஆநர்தக்யம் உததத்தாணும் யாவத்ஜீவம் அக்னிஹோத்ரம் குர்யாத் குர்வன் எவெஹகர்மாணி ஜிஜீவிஷேத் சதம்ஸமா:" இதுமுதலிய அநேகம் உபநிஷத்து வாக்கியங்கள் பிரமாணம்." என்று தமது மதத்தைச்சொல்லி "இவ்விவாதத்தில் நான் தோல்வியடைந்தால், இந்த சுக்ல வஸ்திரத்தை விட்டுவிட்டு, சிகை, யக்ஞோபவீதம் இவ்விரண்டையும் த்யாகம் செய்து, காவிவஸ்திரம் தரித்துக் கொள்வேன்" என்று பிரதிக்ஞையும் செய்தார். இப்படி ஐந்தாறு நாட்கள் இருவரும் வாதம்செய்து கொண்டனர். பிறகு வாதத்திற்குச் சாக்ஷியான மண்டனருடைய மனைவி இருவருடைய கழுத்திலும் ஒவ்வொரு மாலையைப் போட்டு விட்டு, "எவருடைய மாலை வாடுகின்றதோ, அவர் வாதத்தில் தோற்றவராம்" என்றுசொல்லி வீட்டிற்குள் சென்றாள்.

மண்டனர்:—"ஓ சந்நியாசியே! ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் தாங்கள் ஐக்கியம் ஒப்புக்கொள்கிறீர்களே அதற்குப் பிரமாணம் யாது?" என வினவினர்.

ஆசார்யரும் அதைக்கேட்டு "ஓ மண்டனரே! 'தத்வமசி, அகம் பிரம்மாஸ்மி, அயமாத்மா பிரம்மம்' இது முதலிய நூற்றுக்கணக்கான உபநிஷத் வாக்கியங்கள்தாம் பிரமாணம்" என்று சொன்னார்.

மண்டனர் :—"யதீச்வரரே! வேதத்தில் ஹூம், பட், முதலிய சில பதங்களிருக்கின்றனவல்லவா? அவைகள் எல்லாம் ஜபத்திற்கு மாத்திரம் உபகாரமானவை என்று தாங்களும் ஒப்புக்கொள்கிறீர்களல்லவா? அப்படியே 'தத்வமஸி' என்ற வாக்கியங்களும், அவைகளை ஜபித்தால் பாபம்போய் விடும்; அல்லாது 'தத்வமஸி' என்ற வாக்கியத்திற்கு அர்த்தமில்லை."

ஆசார்யர் :—"ஹூம், பட், முதலிய பதங்களுக்கு அர்த்தமொன்றுமில்லாததால் அவைகள் ஜபத்திற்கு மாத்திரம் உபயோகமானவை என்று பெரியோர்கள் நிச்சயித்தனர். தத்வமஸி முதலிய பதங்களுக்கு அர்த்தம் இருப்பதால் எப்படி ஜபத்திற்கு உபயோகமானவைஎன்று சொல்லமுடியும்?"

மண்டனர் :—"ஓ யதீச்வரரே! தத்வமஸி என்ற வாக்கியங்களுக்கு மேல்போக்காய், ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும், ஐக்யம் அர்த்தமாகத் தோன்றிய போதிலும், யாகத்தைச்செய்யும் யஜமானருடைய புகழ்ச்சிதான் உண்மையான அர்த்தம். ஆகையால் இந்த வாக்கியங்கள் யாகாதிகளைச் சொல்லும் விதி வாக்கியங்களுக்கு உதவியாகத்தா னிருக்கும்."

ஆசார்யர்:—"யாகாதிகளைச் சொல்லும் காண்டத்தில் இருக்கும் வாக்கியங்கள் உதவியாக ஆகலாம். ஞானகாண்டத்திலிருக்கும் வாக்கியங்கள் எப்படி உதவியாகும்?"

மண்டனர் :—"ஓ யதீச்வரரே! ஆனால் 'மனோப்பிரம்மேத் யுபாஸீத' என்ற வாக்கியத்தில் மனதை பிரம்மமாக உபாஸனை செய்யவேண்டுமென்று அர்த்தமாவதுபோல், தத்வமஸி என்ற வாக்கியத்திலும், ஜீவாத்மாவை பரமாத்மாவாக உபாஸனை செய்யவேண்டுமென்று அர்த்தம் வைத்துக்கொள்ளுங்கள். ஏன் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்கியத்தைச் சொல்ல வேண்டும்?"

ஆசார்யர் :—"ஓ மண்டனரே! 'மனோப்பிரம்மேத் யுபாஸீத' என்றவிடத்தில் உபாஸீத என்றபதம் விதி விகுதியை உடையதா யிருக்கிறபடியால், அவ்வாக்கியம் உபாஸனையை விதிக்கிறது என்று சொல்லுகிறோம். தத்வமஸி என்ற வாக்கியத்தில் விதிவிகுதியை உடையபதம் ஒன்றுமில்லாததால், எங்ஙனம் அவ்வாக்கியம் உபாஸனையை விதிக்கும்?"

மண்டனர் :—"ஓ யதீச்வரரே! 'பிரதிதிஷ்டந்தி ஹவாயயேதா ராத்ரி: உபயந்தி.' என்ற வாக்கியத்தில் விதி விகுதியையுடைய பதம் ஒன்றுமில்லாத போதிலும், விதிவிகுதியைக் கற்பித்து, விதிவாக்கியம் என்று சொல்வது போல, தத்வமஸி என்ற வாக்கியத்திலும் விதியைக்கற்பித்து ஏன் விதிவாக்கியம் என்று சொல்லக்கூடாது?"

ஆசார்யர் :—"ஓ மண்டனரே! அந்த வாக்கியத்தில் பிரதிஷ்டந்தி என்ற பதம் பலனைச் சொல்லுகின்றது. ஆதலால் விதியைக் கற்பித்தோம். இங்கு பலன் ஒன்றுமில்லாததால் எப்படி விதியைக் கற்பிப்பது?"

மண்டனர்:—"தத்வமஸி வாக்கியத்திலும், மோக்ஷமாகிய பலனிருப்பதால் விதியைக் கற்பிக்கலாம்."

ஆசார்யர்:—"ஆனல் உபாஸனை என்ற க்ரியைக்குப்பலன் மோக்ஷம் என்றேற்படுகிறது. க்ரியைக்குப் பலனுனவைகள் எல்லாம், நாசமுடையவைகளாகும். மோக்ஷம் நாசமுடையதல்ல."

மண்டனர் :—"தத்வமஸி என்ற வாக்கியம் உபாஸனையை விதிக்காவிடில், ஜீவாத்மாவக்கும், பரமாத்மாவுக்கும், சாம்யத்தை விதிப்பதென்று வைத்துக் கொள்வோம்."

ஆசார்யர் :—"ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் சாம்யம் சேதனம் என்று வைத்துக்கொண்டு சொல்லுகிறீர்களா? தத்வமஸி என்ற உபதேசத்திற்கு முன்னமே இரண்டும் சேதனம் என்று தெரிகிறபடியால், உபதேசமே பயனற்றதாகும். சர்வக்யம் என்று வைத்துக்கொண்டு சாம்யம் சொல்லுவதால் தனது ஸித்தாந்தத்திற்கு விரோதமாகும்."

10. இவ்வாறு பற்பல யுக்திகளைக்கொண்டு ஆசார்யர் மண்டன மிஸ்ரரை ஜெயித்தார். மண்டனரது கழுத்திலிருக்கும் மாலையும் வாடிற்று. சரஸ்வதியின் அவதாரமான மண்டனரது பனைவியும், தனது பர்த்தாவின் கழுத்தில் வாடிய மாலையைப் பார்த்து, இருவரும் பிக்ஷைக்கு வாருங்களென்றழைத்து, "முன் காலத்தில் எனது கன்னிப் பருவத்தில் தூர்வாஸ ரிஷியால் இடப்பட்ட சாபம் இத்துடன் நீங்கிவிட்டது. ஆகையால் நான் எனது ஸ்தானமாகிய சுவர்க்கத்திற்குப் போகின்றேன்" என்று சொல்லிப் புறப்பட சரஸ்வதியை ஆசார்யர் வனதுர்க்கா மந்திரத்தால் கட்டி சிறிதுகாலம் பூலோகத்தில் வாஸம் செய்து பிறகு சுவர்க்கம் செல்லவேண்டுமென்று வேண்டிக் கொள்ள சரஸ்வதி பூலோகத்தில் வாஸம் செய்தாள்.

# இந்தியாவின் கல்வி நிலை.

(டாக்டர். மே. மாசிலாமணி முதலியார் எழுதியது.)

இந்தியா சுமார் நூற்றைம்பது வருஷங்களாக ஆங்கிலேயரால் ஆளப்பட்டு வருகின்றது. இம்மேனாட்டாரின் ஒன்றரை நூற்றாண்டின் ஆட்சியில் நாம் கல்வி விஷயத்தில் எவ்வளவு முன்னேற்றம் அடைந்துள்ளோமென்பதே இக்கட்டுரையின் ஆராய்ச்சியாகும்.

மேன்மையாகவும் சுகமாகவும் பிறநாட்டார்கள் மதிக்கும் வண்ணமாகவும் உயிர்வாழ நமக்கு அவசியமாக வேண்டிய அறிவு பெருக்கும் கல்வியை நாம் அடையுமாறு தாய்தந்தையர்களும் அரசாங்கமும் பொறுப்பேற்று ஆராய்ந்து தக்ககல்விச்சாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்பது யாவரும் அறிந்ததே.

நமது அரசாங்கத்தவர்கள் நமக்கு அமைத்துள்ள கல்வி முறைகளைக் கவனிப்போம். சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் நம்நாட்டிற்கு கிழக்கிந்திய கம்பனியைச்சேர்ந்த லார்ட் மெக்காலே என்பவர் இந்நாட்டை ஆட்சிபுரிவதற்கு அவசியமான அரசாங்கக் காரியஸ்தர்களை ஆங்கில நாட்டிலிருந்தே தருவிப்பது மிககஷ்டமாயிருத்தலை உணர்ந்து இந்தியர்களுக்கு ஆங்கிலம் கற்பித்து அவர்களைக் கொண்டே எல்லா அரசாங்கக் காரியாலயங்களிலும் குமாஸ்தா வேலைகளையும் மற்றுமுள்ள பல வேலைகளையும் முடிப்பதெனக்கருதி அதற்கு வேண்டிய முறையில்-அதாவது பாஷா ஞானத்துக்குரிய—கல்விச் சாலைகளை ஏற்படுத்தினர். அக்காலத்தில் ஆரம்பிக்கப் பட்ட வகையிலேயே இப்போதும் கல்விபோதிக்கப் படுகின்றது என்பது ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளவேண்டிய விஷயமாகும்.

இதே நூற்றைம்பது வருடங்களுக்கு முன் அநேக நாடுகள் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தன. ஆனால் இன்று அவைகள் பூரணமான முன்னேற்றம் பெற்று விளங்குகின்றன. இதன்காரணம் அத்தேசங்களின் கல்வி அமைப்பேயாகும். அவர்களது கல்விச்சாலைகளில் கைத்தொழில், விவசாயம், ரசாயன சாஸ்திரம், மின்சாரசாஸ்திரம், புதியபுதிய கருவிகளமைக்கும் வகை, உலோகங்களின் அமைப்புகள், அவற்றை உபயோகிக்கும் வகைகள், கப்பல், ஆகாய விமானம், நீர்மூழ்கிக்கப்பல் முதலியவைகளைச் செய்யும் வகைகள், ஆகாயத்தந்தி வானசாஸ்திரம் முதலியவைகள் போதிக்கப்படுவதால் அவர்கள் முன்னேற்ற மடைந்தனர்; இப்போதும் அடைந்துகொண்டு வருகின்றனர்.

ஆனால் நமது அரசாங்கத்தாரோ ஒன்றரை நூற்றாண்டுகளுக்கு முன் எந்த அபிப்பிராயத்தோடு கல்விச்சாலைகளை அமைத்தார்களோ அதே அபிப்பிராயத்தோடுதான் இன்றளவிலும் நடத்தி வருகின்றார்கள். ஆனால் நம்மில் சிலர் அரசாங்கத்தார் ஒவ்வொரு வருஷமும் புதிய புதிய பாடப்புத்தகங்களை ஏற்படுத்திப் பழயவைகளை மாற்றுவதால் நவீன முறையில் கல்வி

கற்பிப்பதாக நினைக்கலாம்; இது ஒரு வகையில் உண்மையே. ஆனால் இம் மாறுதல்களை பாஷா ஞானம் எளிதில் வரக்கூடியதற்கேற்ற முறைகள் என்று கருதலாமே யொழிய தேசநன்மையில் அரசாங்கத்தார் இத்தனை காலமாக நமக்குப்போதித்து வந்த—வருகிற—கல்வியினால் நமக்கு வேண்டிய தேவை களில் ஒன்றையேனும் நாமே தயாரித்துக் கொள்ளக்கூடிய நிலைமையிலிருக் கின்றோமா என்பதை யோசித்துப்பாருங்கள்.

இன்றைக்கு நமக்குவேண்டிய தீக்குச்சி வெளிநாடுகளிலிருந்து வர வில்லை என்றால் நாம் பல வருஷங்களுக்குமுன் எந்த சக்கி முக்கிக்கல்லை உபயோகித்து வந்தோமோ அதையேதான் தேடவேண்டிவரும். துணிதைக்க நூலும் ஊசியும் வெளிநாட்டார் அனுப்பாவிடில் நமது பாடு திண்டாட்டமே. போக்கு வரவுக்குரிய ரயில்வண்டிகளையோ, மோட்டார்களையோ, மாட்டு வண்டிகளையோ, குதிரை வண்டிகளையோ வெளிநாட்டுச் சாமான்களின்றி நாமே செய்துகொள்ள முடியாது. நாம் குடியிருக்க வீடுமுதலியவைகளை நிர்மாணிப்பதற்கும்கூட வெளிநாட்டுச் சாமான்களின் உதவியையே நாடு கின்றோம். தந்தி தபால், கப்பல் முதலிய எல்லாவற்றிற்கும் நாம் அயல் நாட்டையே எதிர்பார்க்கிறோம். வீட்டி லெரியும் விளக்கு, அவ்விளக்குக்கு எண்ணெய் எல்லாம் வேறு நாடுகளிலிருந்தே வரவேண்டும். அதிகம் விரிப் பானேன்? நமது குழந்தைகளின் ஆகாரங்கூட எங்கிருந்து கிடைக்கிறது? ஆர்லிக்ஸ், மெல்லின்ஸ், பெஞ்சர்ஸ், ஆலம்பரிஸ், ஓவல்டின் முதலிய பெயர்க ளோடு பரதேசத்தார் அனுப்புவதேயாகும். நோய் வந்துவிட்டது. ஒளஷதம் வேண்டும். வெளிநாட்டாரை எதிர்பார்க்கவேண்டும். உடுக்க ஆடையில்லை, மான்செஸ்டர் ஆடையனுப்பும் வரை காத்திருக்க வேண்டும். இத்தகைய நிலையில் வாழ்வதுதான் நாம் நூற்றைம்பது வருஷங்களாக கடவுளைப்போல் மதித்துவரும் அரசாங்கத்தாரின் கல்வியினால் அடைந்துவரும் பயன்.

சாதாரணமாக நம்நாட்டில் கொஞ்சகால முன் பி.ஏ., எம்., ஏ., படித்து விட்டால் அரசாங்கத்தில் பெரிய வேலைகள் கிடைத்து வந்தன. ஏனெனில் அக்காலத்தில் படித்தவர்களின் தொகை அதிகமில்லை. ஆனால் இப்பொழுதோ படித்தவர்களின் தொகை அதிகமாகி விட்டபடியால் வேலை கிடைக்காமல் திண்டாடும் காலமாயிருக்கிறது. பி. ஏ., எம். ஏ. பட்டதாரிகளுக்கு அர சாங்க உத்தியோகங்கள் கிடைக்கா விட்டால் வேறு எத்தொழிலேனும் செய்து சம்பாதிக்க முடியுமா? என்பதுதான் நமது கேள்வி. அல்லது பிற நாடுகளில் போய் நான் இந்தியாவில் பி. ஏ. பட்டம் பெற்றவன் என்று சொன்னால் நமக்கு ஏதாவது பிழைப்புக்கு வழியுண்டா? என்று கேட் கின்றோம்.

1921-வது ஆண்டு பெல்ஜியம் நாட்டிலிருந்து ஒரு பெரியார் இந்தியா விற்கு விஜயம் செய்தார். அவரிடத்துப் பேசியபோது அவர் தமது நாட்டுக்

கல்வியைப்பற்றிக் கூறியவை இன்னும் எமது நினைவிலேயே இருக்கின்றன. 'எங்கள் ஊரில் 26-ராஜதானிப் பள்ளிக்கூடங்கள் உண்டு. அவைகளில் நன்கு பிழைக்கத்தகுந்த பலவகையான போதனைகள் கொடுக்கப்படுகின்றனவே யொழிய குமாஸ்தாவேலைக்கான படிப்பே எங்கள் நாட்டில் கிடையாது. பலநாட்டவர்கள் எங்கள்நாட்டில் படிக்கின்றனர். இந்தியதேசத்தவர் மாத்திரம் வருவதில்லை. அப்படி யாராவது இங்கிலாந்துக்கு வந்தாலும் அத்தகையவர்கள் பிறரிடம் சேவகஞ்செய்யும் பிழைப்புக்கேற்ற சி. ஐ. எஸ்., பாரிஸ்டர் முதலிய இவைகளையே பெரிதாகக் கருதுகின்றனர்கள். மற்றவைகளை அவர்கள் விரும்புவது கிடையாது. ஆகவே உங்கள் தேசத்தவர்கள் நாங்கள் புத்திசாலிகள், அறிவாளிகள், என்று தங்கள் அறியாமையை மறந்து பெருமையாய்ப் பேசிக்கொண்டாலும் நாங்கள் மதிக்கக்கூடியவகையில் நீங்கள் கல்வி பயிலவில்லையென்றே சொல்லுகிறோம். அன்றியும் உங்கள் அறியாமையை ஆதரவாக வைத்துக்கொண்டே நாங்கள் எங்கள் நாட்டு வியாபாரத்தை இங்கு பரவச்செய்து பொருள் சம்பாதித்து வருகிறோம். நானும் வியாபாரமூலம் உங்கள் பொருளைக் கவர்ந்துபோகவே வந்துள்ளேன்' எனப் பேசி முடித்தார்.

வீண்பெருமை பேசும் மக்களே! உங்கள் அறிவை விசாலப்படுத்தி நோக்குங்கள். அயல்நாட்டார் நம்மை எந்த நிலையில் வைத்திருக்கிறார்கள் என்பது உங்களுக்கு நன்றாக விளங்கவில்லையா? இதன்காரணம் நமது அரசாங்கத்தார் நமக்குச் சரியான கல்விச்சாலைகளை ஏற்படுத்தாத குறையல்லவா? குடிகளை முன்னேற்ற மடையச்செய்வது அரசாங்க தருமம். அத்தகைய கடமையை அரசாங்கம் இதுவரையில் செய்துவந்திருந்தால் நாம் இந்நிலையிலிருக்கக் காரணமில்லை.

நமது அரசாங்கக்கல்வி இலாகா மந்திரியை ஒன்று கேட்கின்றோம். அதாவது, நமது நாட்டுக்கல்வியை இதுவரை நடந்துவந்ததுபோலவே நடத்தப்போகின்றீர்களா? அல்லது மாற்றப்போகின்றீர்களா? மாற்றப் போவதில்லையென்று பதிலளிப்பீர்களானால் படித்த வகுப்பார்களுக்கும், இனிப் படிக்கும் மாணவர்களுக்கும் அரசாங்கவேலை தருவீர்களா? தரவேண்டுமென நினைத்தாலும் முடியுமா? இல்லையெனில் படித்தவர்களின் கதி என்ன? அவர்கள் எவ்வகையில் பிழைப்பது என்பதைக் கருதவேண்டியது அரசாங்கமல்லவா? என்பதேயாகும்.

இதுபோழ்து நமது மாணவர்களின் கதியைப் பார்ப்போமானால் கண்ணீர்விடவேண்டியதுதான். சில தினங்களுக்கு முன்பு தபால் கணக்குப் பரிசோதக இலாகா (Postal Audits Department) வில் சில புது குமாஸ்தாக்களை வைக்கப்போவதாகப் பிரசுரித்திருந்தனர். அப்பிரசுரத்தில் வேலைக்கு வருவோரைப் பரீட்சைசெய்யப்படுமென்றும் அதற்கு முதல் கட்டணமாக 3-ரூபாய் கொடுக்கவேண்டுமெனவும் எழுதப்பட்டிருந்தது. தேவையாயிருந்தது 7 - அல்லது 8-குமாஸ்தாக்களே. ஆனால் 1050 பி. ஏ. பட்டதாரிகள் 3-ரூபாய் கொடுத்து விண்ணப்பம் செய்தார்களாம். இந்நிலையிலிருக்கும் மாணவர்களுக்காக அரசாங்கக் கல்வி மந்திரியார் என்ன செய்ய யோசிக்கிறார் என்பது தெரியவேண்டும்.

---

# அறிஞரின் அமுதமொழிகள்.

(387-ம் பக்கத் தொடர்ச்சி.)

**96.** Better is a dinner of herbs where love is ; than a stalled ox and hatred therewith *Bible.*

பகையுள்ள யிடத்தில் நற்சுவையுடன் கூடிய விருந்துண்ணலைக் காட்டிலும் அன்புள்ள இடத்தில் புல்லையே விருந்தாகப் புசிக்கலாம். (பைபில்)

(முகங்கடுத்து இடும் அமுதினும் முகமலர்ந்திடும் கூழே மேல்) (பழமொழி)

**97.** Train up a child in the way he should go ; and when he is old, he will not depart from it *Bible.*

குழந்தைப் பருவத்திலேயே எப்பாதையைப் பின்பற்ற வேண்டு மென்பதைப் பழக்கு. அது பெரியதானாலும் அப்பாதையினின் றும் பிரளாது. (தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்.) (பைபில்)

**98.** What's in a name ? That which we call a rose ;
By any other name would smell as sweet ? *Shakespeare.*

பெயரில் என்ன இருக்கிறது ; நாம் எதை ரோஜாப் புஷ்பம் என்று சொல்லுகிறோமோ அதற்கு வேறு பெயரிட்டாலும் அதன் மணம் மாறுமா ? (ஷேக்ஸ்பியர்)

(கரும்பை வேம் பென்றால் அது வேம்பாகுமா ?)

**99.** When sorrows come, they come not single spies
But in battalions.

துன்பங்கள் தனித்து வாராவாம், அவைகள் ஒன்றன்பின் ஒன்றாய் கோடிக் கணக்காய் வருமாம். (பட்டகாலிலேயேபடும், கெட்ட குடியே கெடும்)

**100.** Attempt the end, and never stand to doubt,
Nothing's so hard but search will find it out *Herrick.*

முடிவுவரையில் பிரயாசைப்படு. எப்போதும் சந்தேகத்துட னிராதே. எவையும் அவ்வளவு கடினமல்ல, ஊக்கத்தால் எவை யும் சுலபமாய் முடிந்து விடும். (ஹெர்ரிக்)

(ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்றுபவர்) (குறள்)

**101.** Virtue could see to do what virtues would
By her own radiant light, though sun and moon
Were in the flat sea sunk *Milton.*

சூரியனும் சந்திரனும் அகண்டகடலில் மூழ்கி (வெளித்தோன்றாம லிருந்தாலும்) நற்குணம் தனக்குத்தான் உண்டாகிய ஜோதியின் மயத்தால் தன்னுடைய சுசீலத்தைப் பிரகாசிக்கச் செய்யும். (மில்டன்)

(நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும்) (குறள்)




## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(389-ம் பக்கத்தொடர்ச்சி.)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

**கடைக்காரன்:**—அவள் வேதம்மாள் மகள், நாடகத்திலிருக்கிறுன்.

**ஆனந்த:**—அவள் நல்ல அழகியல்லவா? முதல் வீட்டின் மேல்மாடியில் யார் வசிப்பது?

**கடைக்:**—"ஒரு உபாத்தியாயர். குட்டை மனிதன்" என்று கையால் உயரத்தைக் காட்டினுன்.

அதைக் கேட்டதே ஆனந்தலிங்கண்களில் ஒருவிதப் பிரகாசம் உண்டாயிற்று. உபாத்தியாயரா? இருக்கலாம். அவன் எண்ணெய்ச் சீலை வாங்கக் கூடும். இப்போது அவன் வீட்டிலிருப்பானு?

**கடைக்:**—எனக்குத் தெரியாது,

**ஆனந்:**—அவன் தனியாகவே யிருக்கிறுனே?

**கடைக்:**—அப்படித்தான் நினைக்கிறேன்.

**ஆனந்த:**—இருக்கும். நான் இப்போதுபோய் வேதம்மாளைக் காணலாமோ?

கடைக்காரன் கடியாரத்தைப் பார்த்து, ஒன்பது மணியாயிற்று, இப்போதவள் தன்மகளோடு நாடகத்திற்குச் சென்றிருப்பாள்" என்றுன்.

**ஆனந்:**—ஓ! மகளைத் தானே அழைத்துச் செல்கிறுளோ!

**கடைக்:**—ஆம் ஆம்.

ஆனந்தலிங் "ஒகோ! அப்படியானுல் இன்று வேளை மிஞ்சிவிட்டது எங்கும்போய் நடக்காது. நான் வீட்டிற்குச் செல்கிறேன் வந்தனம்" என்று புறப்பட்டான்.

---

## 8—வது அத்தியாயம்.

பீர் கடையில் தன்காலம் வீணுய்க்கழிந்த தென்று ஆனந்தலிங் கருதவில்லை. ஏனெனில் எப்படியும் பசியாற்றிக்கொள்ள கொஞ்சம் காலம் செலவழித்தே தீரவேண்டும். எப்படி யாயினும் அந்த வீட்டிலிருக்கும் இரகசிய அறைகளுக்கு எப்படியாவது மறுபடி சென்று அவற்றைப் பூரணமாய்ச் சோதிக்க வேண்டுமென்பது அவனுடைய கருத்து. கடைக்காரன் கூறியது உண்மை யாயின் நடுவீட்டில் பிரவேசிப்பதற்கு இதுவே தக்க சமயமென்று கருதினுன். உபாத்தியாயர் வசிக்கும் அறை காலியாயிருக்கும் என்பது சந்தேகமாகவே யிருந்தது.

உபாத்தியாயரே தன்னைத் தொடர்ந்து வந்தவனென்றும் அவன்கூட வந்தவன் பிச்சனே யென்றும் ஆனந்தலிங் உணர்ந்து கொண்டான். இரண்டு கொலையாளிகளும் இப்போது பெரும்பாலும் அங்கு ஒளிந்துகொண் டிருப்

பார்க ளென்றே ஆனந்தலிங் எண்ணிக்கொண்டான். அவர்கள் அங்கு இருப்பார்களென்ற எண்ணமே அங்கு செல்லவேண்டுமென்று அதிக ஆவலையுண்டாக்கியது.

அங்கு முரட்டுத் தனமாய்ச் சென்று உயிருக்கு ஆபத்து தேடிக்கொள்ளும் மூடனல்ல அவன். தன் தந்தையைக் கொன்றவர்கள் இன்னுரென்று தெரிந்தாலும் அதற்கு ஏற்பாடு செய்தவர்கள் அந்த இரகசிய அறைகளிலிருப்பதால் அந்த விடத்தைச் சோதிக்கவேண்டுமென்பதே அவன் கருத்து.

கள்ளருக்கு அவன் தந்தையைத் தெரியுமேயன்றி தன்னைத் தெரியாது. ஆகையால் அவன் மாறுவேடத்தில் அதிக சிரத்தையெடுத்துக்கொள்ளவில்லை. இருக்கும் மாறு வேடத்தோடேயே செல்லத்தீர்மானித்தான். முன்னுலேயே தன் இரண்டு துப்பாக்கிகளையும் சரியாயிருக்கின்றனவாவென்று பார்த்துக் கொண்டான். அவையன்றி அவனிடம் ஒரு நேர்த்தியான சிறு வில் கத்தியும், ஒரு சிறு இராந்தலும் இருந்தது. அந்த இராந்தலையேர்த தீக்குச்சி வேண்டியதில்லை. அதன்பக்கத்திலிருக்கும் ஒரு பொத்தானை யழுத்தினுல் தானே பற்றிக் கொள்ளும். அது மிக்க சிறிய இராந்தலாயினும் பிரகாசம் அதிகமே.

ஆனந்தலிங் எதற்கும் எச்சரிக்கையோடு முதலில் மூன்ருவது வீட்டிற்குச் சென்ருன். அவன் வெளிப்படிகளில் ஏறிக் கடைசி படிக்கு முன்படியில் சென்றதும் நின்று ஒத்துக்கேட்டான். ஒரு சந்தடியுமில்லை. பிறகு தலைப் படியில் கால்வைத்து வாசற்படியில் ஏறியதே, வேதம்மாள் வீட்டிலிருந்த கள்ள அலமாரியில் கால்வைத்ததே மணியடித்ததுபோல் எங்கோ ஒரு மணியடித்தது.

ஆனந்தலிங் "ஆ! அதேமணி; முன் எச்சரிக்கை செய்தது நலமாயிற்று. இந்தமணியின் உளவைப்பற்றி சீக்கிரம் பின்னுல் கவனிப்போம். இந்த வழியாருக்கும் தெரியாமல் உள்ளே செல்ல முடியாது. இவர்கள் வருகிறவர்களை முன்னுடி பார்த்துக்கொள்வதற்கு ஏதேதோ இரகசிய ஏற்பாடு செய்து வைத்துக்கொண் டிருக்கிருர்கள். ஆயினும் அப்படிப் பார்க்க இந்த இருட்டில் முடியாது. நாம் இந்த உச்சிப்படியில் கால் வைத்ததும் மணியடித்தது. அதிலிருந்து காலையெடுத்ததும் மணிச் சத்தம் நின்றுவிட்டது. அப் படியில் ஏதோ உளவிருக்கிறது" என்று தனக்குள்ளேயே சிந்தித்துக் கொண்டு கதவருகிற்சென்று அதைத் தடவிப் பார்த்தான்.

"ஹா பலமான கதவு உயர்தரவில் பூட்டு. இதன் சங்கதி தெரியும் ஒவ்வொருவரிடமும் ஒரு சாவி யிருக்கிறது. அதுவும் ஏனென்று தெரியும். நாம் பிரியப்பட்டால் இதைத் திறந்துகொண்டு உள்ளே செல்லலாம். ஏனென்ருல் உட்பக்கம் தாளிடப்படவில்லை" எனச் சிந்தித்துக் கொண்டே கதவைப் பலதரம் தட்டினுன். ஒரு சந்தடியுமில்லை. ஆயினும் உள்ளே யாருமில்லையென்பது அவனுக்குச் சந்தேகமே.

உடனே திரும்பி தலைப்படியில் கால்வைக்காமலே மறு படிக்குத் தாண்டினுன். மணி யடிக்கவில்லை. திரும்பி தலைப்படியில் கால்வைத்தேறினுன். முன்போலவே மணி யடித்தது. ஓ சரி சரி, இனி சந்தடி செய்யாமலே உள்ளே செல்ல உளவு தெரிந்துவிட்டது. இனி நடு வீட்டைப் பார்ப்போம்" என்று சிந்தித்துக் கொண்டே கீழிறங்கினுன்.

---

# மதிப்புரை.

'ஜாதக கணிதம்'-ஆனந்தபோதினி பஞ்சாங்க கணித ஆசிரியர் ஸ்ரீமான் வி. ஜி. ராஜன், B. A. இயற்றிய 'ஜாதககணிதம்' என்ற புத்தகத்தைக் கண்ணுற்று களித்தோம். 'கணிதக் கடலில் ஆழ்ந்து அகம் சோர்ந்து முகம் வியர்த்துச் செய்யக்கூடிய ஸ்ரீபதி பத்ஹதி கணிதத்திற்காவது ஜந்திரிகள் இயற்றவாவது! இஃதோர் அரியலாத செயல்' என்றேகருதி யாம்வாளா விருந்தனம். தற்போது இனிய நடையில் புதிய வழியில் சுளுவான முறையில் எழுதப்பட்டுள்ள இந்த 'ஜாதக கணிதம்' சற்றும் குற்றமின்றி ஜாதகம் கணிக்கவும், ஸ்ரீபதியால் மிக்க சிரமத்துடனும் கேசவரால் சற்று சிரமம் குறைத்தும் காண்பிக்கப்பட்டிருக்கின்ற ஜாதக கர்ம பத்ஹதியை மிக்க அவாவுடன் செய்து முடிக்கவும். ஓரின்றி யமையாத கருவியாகி நிற்கின்றது. இப் புத்தகத்திற் பற்பல பகுதிகளைப் படித்தும் சிற்சில பகுதிகளைக் கணித்தும் நோக்குகையில் ஒப்பிலா வியப்பும் உவகையும் எம்மனத்திட முதித்தன. வாய்ப் பாடமாகத் தெரிய வேண்டிய சில வாய்ப்பாடுகளும், கொஞ்சமும் சஞ்சலமின்றிக் கையாளக்கூடிய பல ஜந்திரிகளும் இப் புத்தகத்திற் பொதிந்து கிடக்கின்றன. த்ரைராசிக கணித வாக்யங்கள் தசாம்ச பின்னமறியாதோரும் எளிதிலுபயோகிக்கு முறையியற்றப்பட்டிருப்பது மிகக் கொண்டாடற்பாலது. ராசி, ஹோரை, திரேக்காணம், ஸப்தாம்சம் முதலிய ஸப்த வர்க்கங்களையும் சந்தேகமற எளிதிலியற்றும் வண்ணம் இயற்றப்பட்ட ஜந்திரிகள் மிக உதவுகின்றன. ஸப்த வர்க்கத்தையொட்டி பற்பல ஆசிரியர் ஒருவரை யொருவர் வெட்டிப் பேசிப் படிப்போருக்கு மனக்கலக்க முண்டாக்கக் கூடிய வெவ்வேறு கோட்பாடுகளை யொழித்து, சோதிடக் கடல் கடந்த வாராஹ மிஹிரரின் வன்மையுற்ற வழியைக் கைப்பற்றியது புகழத்தகும். திருக்பல ஜந்திரிகள் சிந்தையை மகிழச் செய்கின்றன. உச்சபல ஜந்திரி மெச்சத் தக்கது. காலபல ஜந்திரிகள் மேலான முறையில் இயற்றப்பட்டன. உப அஹர்கண வாக்கியங்களின் உதவி ஒப்பற்றது. சேஷ்டா பலம் கணிக்க இவர் வரைந்ததினும் குறைந்த சிரமமுள்ள முறையொன்று உண்டென்று யாம் கருதிலம். இந்த 'ஜாதக கணிதத்தில் பலவித ஆயுர்தாய முறைகளை எளிதில் கணக்கிட்டறியுமாறு அமைக்கப் பெற்ற ஜந்திரிகளைப் பார்த்து மனமகிழ்கின்றோம். ஸ்ரீபதி முதலிய பத்ஹதிகளில் ஆயுர்தாய கணனமே மிகக் கடினமாயது. கோட்கள் தராநின்ற ஆயுட்களில், அவைகளின் நீசம், உச்சம், அதிர்சயம், வக்ரம், யுத்தம் முதலிய பற்பல முகாந்தரங்களாற் கழித்தலும் பெருக்கலும் பலவுள. இந்த 'ஜாதக கணிதத்தில் ஒழுங்கான வழியைக் கைக்கொண்டு ஒவ்வொன்றுக்கும் உதாரண மியற்றிச் செய்முறையைச் செவ்வனே விளக்கியது மிக்க பயனைத் தந்துதவுகின்றது. லக்னமும் தசமலக்னமும் கணிப்பதற்குதவுமாறு நிரயன ஸாவன ராசிமான ஜந்திரி மிகவும் பயனைத் தருகின்றது. கணிதத்தி லுள்ள கஷ்டங்களைக் கணப் பொழுதிற் காணுமற் செய்கின்ற இந்த 'ஜாதக கணிதம்' கற்போரையும் கணக்காயர்களையும் களிக்கச் செய்கின்ற ஓர் அரிய கருவியென்பது எமது கருத்து.

| | |
|---|---|
| அரசாங்கக் கல்லூரி கோவை 19-1-1929 | இங்ஙனம் A. K. சாஸ்திரி, வடமொழி கணக்காயர் |



# வர்த்தமானப்பகுதி

☞ மார்கழிமீ "ஆனந்தபோதினி" சஞ்சிகையில் வெளியிடப்பட்ட சொற்பிதிர் போட்டியில் வெற்றிபெற்ற அடியிற்கண்ட ஐந்துபேர்களுக்கு ஒவ்வொரு பாக்கெட் கடிகாரம் அனுப்பப்பட்டிருக்கிறது.

| வரிசை எண். | சந்தா எண். | பெயர். | ஊர். |
|---|---|---|---|
| 385 | 9333 | V. A. துரைசாமி ஐயர் | அலவாக்கோட்டை |
| 502 | 2235 | K. தியாகராஜன் | மயிலாப்பூர் |
| 521 | 14591 | B. முத்துசாமி பிள்ளை | பொன்மலை |
| 614 | 14397 | K. ராமசாமி பிள்ளை | கரந்தை |
| 1367 | 2331 | தங்கம்மாள் | யாழ்ப்பாணம் |

**குறிப்பு:**—முதலில் எடுக்கப்படும் சரியான ஒரு விடைக்கே பரிசு அளிப்பதாகத் தெரிவித்திருந்தோம். ஆனால் அதிக விடைகள் கிடைத்தமையால் 5-பரிசுகளாக உயர்த்தப்பட்டன. இனிமேல் "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையில் சொற்பிதிர் வெளியிடப்படமாட்டாது. ப-ர்.

---

**விலைபெற்ற வீண்பொருள்கள்:**—நாம் தந்திச் சமாச்சாரம் எழுதும்பொழுது ஒன்றுக்கு மேற்பட்ட தந்திபாரங்களை வீணாக்குகின்றோம். நமக்கு அது பெரிதாகத் தோன்றுவதில்லை. ஆனால் இங்கிலாந்துத் தலைமைத் தபாலாபீசார் ஒரு வருஷத்திற்கு 70, 000, 000 தந்திபாரங்கள் வீதம் குப்பைக் கூடையில் எறியப்படுகின்றதெனத் தெரிவிக்கின்றனர்.

துளித் துளியாகக் கசியும் தண்ணீர்க்குழாயின் கசிவால் எவ்வளவோ காலன் (Gallon) ஜலம் வீணாகின்றதாம். நியூயார்க் (New York) கில் இதன் கணக்கைச் சரியானபடி அறிந்துகொள்ள ஒவ்வொரு கசியும் குழாய்க்கும் 2-டாலர் (ஒரு அமரிக்க நாணயம், 3-ரூபாய் மதிப்புக் கொண்டது) வரிபோட்டார்களாம். அதனால் ஒரு வருஷத்தில் 40 000,000000, காலன் தண்ணீர் அதிகப்படியாய் மிஞ்சியதாம்.

ரயில் என்ஜின்கள் ஊதுவதால் அமெரிக்க நாட்டில் ஐக்யமாகாணத்தில் மட்டும் அதற்காகச் செலவாகும் நீராவியை உண்டாக்க வருஷத்தில் 2, 434, 026 டன் நிலக்கரி செலவாகின்றதாம். ரயில் என்ஜின் ஊதிகளை (Railway Engine whistles) முன்புறமாகத் தள்ளிச் சாய்த்து வைத்து அதனின்றும் ஒரே நீண்ட ஒலியை மாத்திரம் உண்டாக்கினோமாகில் ஒரு லக்ஷம் டன்களுக்கும் அதிகமாகவே நிலக்கரியை மிச்சப்படுத்தலாம் என இந்தியானா கலாசாலை டாக்டர் போலே (Dr. Foley of Indiana University) அவர்கள் கூறுகிறார். எரித்தாய்விட்டதெனக் குப்பைத் தொட்டியில் எறியப்படும் நிலக்கரித் துண்டுகளில் மூன்றில் ஒருபாகம் நூற்றுக்கு 50-முதல் 70-வரை எரியும் சக்தியைக் கொண்டதாயிருக்கின்றதாம்.

***

### சுயராஜ்ய சோதிடம்

1947-ம் ஆண்டில்தான் இந்தியாவுக்குப் பூரணசுயராஜ்யம் வருமென்று புனா ஜோதிடரான பி.எஸ் அண்டே கூறுகின்றாராம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**விபவஹு பங்குனிமூ—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347,**
**இங்கிலீஷ் 1929ஹு—மார்ச்சுமூ—ஏப்ரல்மூ**

| பங்குனிமீ | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | திரி9-38 | அஸ்39-0 | அ39-0சி | சம்பத் கௌரீ விரதம் |
| 2 | 15 | வெ | சது4-43<br>பஞ்59-53 | பர36-10 | சித்60 | அவமாகம், சாந்த சதுர்த்தி |
| 3 | 16 | சனி | சஷ்54-53 | கி✕33-0 | அ33-0சி | கிருத்திகை சஷ்டி [னம் |
| 4 | 17 | ஞா | சப்49-43 | ரோ29-45 | சித்60 | வித்தியாரம்பம், உபநய |
| 5 | 18 | திங் | அ44-38 | மிரு26-25 | அ26-25சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 6 | 19 | செவ் | நவ39-30 | திரு23-0 | ம23-0சி | கரிநாள் [ணியம் செலவிட |
| 7 | 20 | புத | தச34-33 | புன19-50 | சித்60 | சுபமுகூர்த்தம் செய்ய, தா |
| 8 | 21 | வியா | ஏகா29-53 | பூச16-53 | அ16-53சி | சர்வமத்வ ஏகாதசி |
| 9 | 22 | வெ | து25-35 | ஆயி14-13 | மர60 | பிரதோஷம் |
| 10 | 23 | சனி | திர22-0 | மக12-18 | அ12-18சி | தானியம் செலவிட |
| 11 | 24 | ஞா | ச○19-20 | பூர11-5 | சி1-15-அ | பௌர்ணமி, காமதகனம் |
| 12 | 25 | திங் | பவு17-35 | உத்11-3 | சித்60 | |
| 13 | 26 | செவ் | பிர17-28 | அஸ்12-13 | சித்60 | |
| 14 | 27 | புத | துதி18-45 | சித்15-0 | சித்60 | |
| 15 | 28 | வியா | திரி21-35 | சுவா19-5 | அ19-5சி | |
| 16 | 29 | வெ | சது25-48 | விசா24-43 | சித்60 | |
| 17 | 30 | சனி | பஞ்31-18 | அனு31-35 | சித்60 | |
| 18 | 31 | ஞா | சஷ்37-35 | கே39-0 | ம39-0அ | |
| 19 | 1 | திங் | சப்44-0 | மூல46-40 | சி46-40ம | |
| 20 | 2 | செவ் | அஷ்49-50 | பூரா53-50 | சி53-50அ | |
| 21 | 3 | புத | நவ54-45 | உத்60 | அமி60 | |
| 22 | 4 | வியா | தச58-13 | உத்0-5 | சித்60 | மாடுவாங்க |
| 23 | 5 | வெ | ஏகா59-50 | திரு4-48 | ம4-48சி | ஸ்மார்த்த ஏகாதசி |
| 24 | 6 | சனி | து59-43 | அவி7-48 | சி7-48அ | வைஷ்ணவ ஏகாதசி |
| 25 | ஏப்ரல்மீ 7 | ஞா | திர57-50 | சதை9-0 | சித்60 | வருணித்திரயோதசி |
| 26 | 8 | திங் | சது54-28 | பூர8-38 | ம8-38சி | மாசசிவராத்திரி |
| 27 | 9 | செவ் | ● அ49-58 | உத்6-40 | அ6-40-சி | சர்வத்திர அமாவாசை |
| 28 | 10 | புத | பிர44-15 | ரேவ3-38<br>அஸ்59-40 | மர60 | யுகாதிபண்டிகை, சித்திக்<br>[கணபதி விரதம் |
| 29 | 11 | வியா | துதி38-0 | பர55-10 | சி55-10ம | சந்திரதரிசனம் |
| 30 | 12 | வெ | திரி31-30 | கி✕50-30 | சி50-30ம | கிருத்திகை, ஆண்டோளன்<br>[திரிதிகை |
| 1 | 13 | சனி | சது24-53 | ரோ45-48 | சித்60 | மாசசதுர்த்திவிரதம் |

| சூரி | குரு சுக் | ராகு | செ |
|---|---|---|---|
| புத | 17உ மீன-புத | | |
| சனி | கே | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.